















## பொருளடக்கம்







SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர
மற்ற எல்லா நாடுகளுக்கும்
விமானத் தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/-
இந்தியாவிற்குள் ரூ.120/-
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத் தொகையை
டி.டி வாயிலாகவோ
அல்லது மணியார்டரிலோ
**சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற
பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# தூய சுற்றுப்புறத்தால் தூய மனம்

அண்மையில் உலகின் பல பாகங்களில் ஒருவகைப் புதிய தொற்று நோய் பரவவே பலர் மாண்டு போயினர். இந்நோயைப் பரப்பிய கிருமியைத் தனிப்படுதத கொஞ்ச காலம் பிடித்தது. ஆந்திரப் பிரதேசத்திலும், மஹாராஷ்டிராவிலும் இனம் தெரியாத காய்ச்சல் கண்டு பல குழந்தைகள் இறந்தன. இதே நோயிலிருந்து பலரைக் காப்பாற்ற டாக்டர்களும் மருத்துவமனைகளும் இதனை மிகவும் சிரமப்பட்டு எதிர்த்துப் போராட வேண்டியதாயிற்று.

அநேகமாகப் பல நோய்கள் காற்றினாலோ, நீரினாலோ அல்லது கெட்டுப்போன உணவினாலோ பரவுகின்றன. இவை யாவும் சுத்தமானதாக இருக்க வேண்டும். ஒவ்வொருவரும் தம் வீட்டையும் சுற்றுப்புறத்தையும் சுத்தமாக வைத்துக் கொள்வதோடு அக்கம் பக்கத்தையும் அசுத்தப் படுத்தாமல் இருந்தால் பல நோய்கள் வராமல் தடுத்துவிடலாம்.

கொசுக்கள் நீர் தேங்கும் இடங்களிலிருந்து வருகின்றன. ஒருவகைக் கொசு ஓடும் நீரிலிருந்தும் பிறக்கிறது. ஓடும் நீரை மாசுபடுத்துவதும், ஆறு, கால்வாய், குளங்களை அசுத்தப்படுத்துவதும் மனிதன் தானே செய்கிறான். இந்த மாதிரி நீர்நிலைகளை மாசுபடுத்தாமல் இருப்பது மக்களின் கடமை. குறிப்பாக படித்தவர்கள் இதில் பொறுப்புடன் நடக்க வேண்டும்.

''மனிதனின் அகமும் புறமும் தூயதாக இருக்க வேண்டும்,'' என்று மகாத்மா காந்தி கூறியது நினைவிற்கு வருகிறது. நாம் தூய எண்ணங்கள் கொண்டால் நம்மைச் சுற்றியுள்ள இடங்களையும் சுத்தமாக வைத்திருக்கவும் எண்ணுவோம். ஆம், சுத்தம் சொர்க்கத்தைவிட மேலானது.

Visit us at : http://www.chandamama.org
ஆசிரியர் : விஸ்வம்

இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள் – 24

நம் புராணங்களில் வரும் இளைஞர்களைப் பற்றிய வினாக்கள் இவை. உங்களால் இவர்களைக் கூற முடியுமா?

முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்*

1 என் குருவின் வயலை வெள்ளத்திலிருந்து காக்க உடைப்பில் நான் படுத்துத் தடுத்தேன். பிறகு நான் முனிவரானேன். நான் யார்?

---

2 உடலில் எட்டு கோணல்களுடன் நான் பிறந்தேன். நான் வந்தி முனிவருடன் வாதம் புரிந்து என் தந்தை கோஹோத முனிவரைக்காப்பாற்றிய நான் யார்?

---

3 நான் ரிசிக முனிவரின் மூன்று புதல்வர்களில் மத்தியவன். விசுவாமித்திரர் என் மாமா. என் பக்தியால் நான் பலியாவதிலிருந்து காப்பாற்றப்பட்டேன். என் பெயர் என்ன?

---

4 நான் வேத முனிவரின் சிறந்த சீடன். என் குருவின் மனைவிக்காக தங்கக் காதணிகளை பாதாள லோகத்தில் இருந்து எடுத்து வந்தேன். நான் யார்?

---

5 பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் குருவானவரின் மகன் நான். வில் வித்தையில் சிறந்தவன். நான்யார்?

---



ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியத் தலைவர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த புராண இளைஞர் ..............................

..............................

..............................

போட்டியாளரின் பெயர்: ..............................

வயது: .................. வகுப்பு: ..................

முகவரி: ..............................

..............................

பின்கோடு: .................. போன்: ..................

போட்டியாளரின் கையொப்பம்: ..............................

பெற்றோரின் கையொப்பம்: ..............................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி - 24**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097

*அனுப்ப வேண்டிய கடைசித் தேதி அக்டோபர் 5, 2003*

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்





உங்கள் படைப்புத் திறனைப் பயன்படுத்தி பரிசை வெல்லுங்கள்

# உங்கள் படைப்புகளுக்கான அழைப்பு

# சிறுவர் சிறப்பிதழ்

## (நவம்பர் 2003 இதழ்)



**இளம் எழுத்தாளர்களுக்கு :** நீங்களே சொந்தமாக எழுதிய 500 சொற்களுக்குள் உள்ள கதைகளைக் வசீகர தலைப்புகள் அளித்து எங்களுக்கு அனுப்புங்கள். கதைகள் ஆங்கிலம், இந்தி, வங்காளம், ஒரியா, மராத்தி, குஜராத்தி, தெலுங்கு, கன்னடம், தமிழ், மலையாளம் ஆகிய மொழிகளில் இருக்கலாம். நீங்கள் மூன்று கதைகளைப் போட்டிக்கு அனுப்பலாம். தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள் சிறுவர் சிறப்பிதழில் (நவம்பர் 2003) 12 மொழிகளிலும் வெளியிடப்படும்.

**இளம் ஓவியர்களுக்கு :** நீங்கள் மூன்று சித்திரங்களையோ அல்லது ஓவியங் களையோ இந்தியப் புராண/வரலாற்று நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டதாய் வரைந்து அவற்றைச் சொற்களில் விளக்கி அனுப்ப வேண்டும். இவற்றில் இருந்து நாங்கள் தேர்ந்தெடுக்கும் ஓவியர்கள் சென்னைக்கு வரவழைக்கப்படுவார்கள் (பயணப் பணம் கொடுக்கப்படும்). அவர்கள் சிறுவர் சிறப்பிதழுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளுக்கு ஓவியங்கள் வரைந்து கொடுக்க வேண்டும்.

**முடிவு தேதி : செப்டம்பர் 15, 2003**

**கவர்ச்சிகரமான பரிசுகளைத் தட்டிச் செல்லுங்கள்**

*போட்டோ : உங்கள் பாஸ்போர்ட் அளவு போட்டோவை படைப்புடன் இணைத்து அனுப்புங்கள்.*

*(கீழுள்ள கூப்பனை நிரப்பி, உங்கள் படைப்புகளுடன் இணைத்து, 'சிறுவர் சிறப்பிதழ் போட்டி', சந்தமாமா இந்தியா லிமிடெட், 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை - 600 097, என்ற முகவரிக்கு அனுப்பவும்.)*

பெயர் : ............................................................ வயது/பிறந்த தேதி : ..........................

வகுப்பு : .................... பள்ளி : ..............................................................................

வீட்டு முகவரி : ..........................................................................................................

..................................................................................................................................

................................................................................ பின்கோடு : ...............................

படைப்புகளின் விவரங்கள் :

1. ....................................................................................
2. ....................................................................................
3. ....................................................................................

மேற்குறிப்பிட்ட படைப்புகள் என் மகனால்/மகளால் யாருடைய உதவியும் இல்லாமல் சுயமாக எழுதப்பட்டவை என்று நான் உறுதி அளிக்கிறேன். அச்சிலும் மின்சாதனங்களிலும் மொழியிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட படைப்புகளைப் பயன்படுத்திக் கொள்ளும் முழு உரிமை சந்தமாமா வினுடையது என்பதற்கு இதன் வாயிலாகக் கட்டுப்படச் சம்மதிக்கிறேன்.

போட்டியாளரின் கையொப்பம்          பெற்றோரின் கையொப்பம்

# மிச்சப்படுத்தலாமே!

அன்று ஞாயிற்றுக்கிழமை. வீணா தன் தாய், தந்தையருடன் தன் தாத்தாவின் வீட்டிற்கு காரில் போய்க் கொண்டிருந்தாள். அவளது தந்தை தான் அதை ஓட்டிக் கொண்டிருந்தார். காரில் போய்க் கொண்டிருந்தபோது வீணாவின் தாயார் பாதையின் எதிர்ப்புற ஓரத்தில் ஒரு தள்ளுவண்டியில் ஒருவன் மாம்பழங்களை வைத்து விற்றுக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

அவள் உடனே தன் கணவரிடம், "காரை நிறுத்துங்கள்! வீணாவின் பாட்டிக்கு மாம்பழம் மிகவும் பிடிக்கும். நான் பாதையைக் கடந்து போய் அவற்றை வாங்கி வருகிறேன்," என்றாள். அப்போது வீணாவிற்குத் தன் வகுப்பு ஆசிரியை எரிபொருளை வீணாக்காமல் மீதப்படுத்தி உபயோகிக்க வேண்டும் என்று கூறியது நினைவிற்கு வந்தது. நீங்கள் உங்கள் காரை எங்காவது இரண்டு நிமிடங்களுக்குமேல் நிறுத்துவதாக இருந்தால் என்ஜினை ஓடவிடாது நிறுத்திவிடுங்கள். உங்கள் காரோட்டியிடமும் இதையே சொல்லி வையுங்கள். இதனால் விலைமதிப்பான பெட்ரோல் மிச்சப்படும்."



வீணா தன் தந்தையிடம் "அப்பா! அம்மா பாதையைக் கடந்துபோய் மாம்பழம் வாங்கிக் கொண்டுவர 5 நிமிடங்களுக்குமேல் ஆகுமல்லவா?" என்று கேட்டாள். அதைக் கேட்டு அவர் ஆச்சரியத்தோடு "ஆமாம். ஆகும்," என்றார். அப்போது வீணா "அப்படியானால் காரின் என்ஜினை நிறுத்திவிட்டு அம்மா திரும்பி வந்ததும் என்ஜினை இயக்கலாமே! இதனால் பெட்ரோலை மிச்சப்படுத்த முடியும். அதனால் காரிலிருந்து புகை கிளம்பி சுற்றுப்புறத்தை மாசுபடுத்துவதைக் குறைக்கும்," என்றாள்.

வீணா சொன்னது உண்மையே என்று அவளது தந்தை உணர்ந்தார். உடனே தன் காரை நிறுத்த வேண்டிய இடத்திற்குக் கொண்டுபோய் நிறுத்தி அதன் என்ஜின் இயங்குவதை நிறுத்தினார்.

பிறகு அவர் "நன்றி வீணா! நீ சூட்டிகையான பெண்," என்றார் புன்னகை புரிந்தவாறே.



# தாராள மனம்

அரசலூரில் அண்ணசாமி என்ற பெரும் பணக்காரன் இருந்தான். அவன் தாராள மனம் படைத்தவன். யார் கேட்டாலும் வாரி வழங்கு பவன். இல்லையெனாது கொடுத்து உதவுபவன். அவன் மனைவி அன் னம்மாளும் அவனுக்கு அனுசரணை யாகவே நடந்து வந்தாள்.

ஊரில் பலர் அண்ணசாமியிடம் ''இப்படி நீங்கள் எல்லோருக்கும் அவர்கள் கேட்பதை எல்லாம் கொடுத்துக் கொண்டே இருந்தால் விரைவில் ஓட்டாண்டி ஆகிவிடுவீர் கள். அப்போது உங்கள் மனைவி, மக்கள் கதி என்னவாகும்? எனவே கொஞ்சம் யோசித்து தான தர்மங்கள் செய்யுங்கள். நீங்கள் நன்கு படித் தவர். புலமை மிக்கவர். உங்களுக்கு நாங்கள் அதிகமாக எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை,'' என்றார்கள்.

இதை எல்லாம் கேட்ட அன்னம் மாளும் ''ஆமாம். அவர்கள் சொல் வதும் சரியே. இப்போது நம் பணம் எல்லாம் தான, தர்மங்களில் கரைந்து போயிற்று. இப்போது இருப்பது சொற்ப பணமே. நமக்கு இரு மகன் கள் இருக்கிறார்கள். அவர்களைப் பட்டணத்தில் படிக்க வைத்து முன் னுக்குக் கொண்டுவர வேண்டும். அதற்கு வழி பாருங்கள்!'' என்றாள்.

அண்ணா சாமியும் ''நீ சொல்வதும் சரியே. பட்டணத்தில் நம் மகன் களைப் படிக்க வைக்க வேண்டும் என்றால் நாம் பட்டணத்திற்குக் குடி போக வேண்டும். இப்போதுள்ள நிலையில் நான் ஏதாவது வேலை பார்த்து சம்பளம் பெற்றாலே நீ சொல்வதைச் செய்ய முடியும். நம் ஜமீன்தாரருக்குப் பட்டணத்தில் ஒரு பள்ளிக் கூடம் இருக்கிறது. அதில் நான் ஆசிரியராகப் பணி புரிகிறேன்,'' என்றான்.

- கௌரிநாதன் -



நாள் அவ்வூர் ஆற்றங்கரையில் உலவியவாறே தாம் அரசலூரைவிட்டுப் பட்டணத்திற்குப் போய் வாழ வேண்டுமே என்று யோசித்துக் கவலைப் பட்டுக் கொண்டிருந்தான்.

அவன் இருந்த இடத்திலிருந்து பத்தடி தூரத்தில் அரசலூர் எல்லை அம்மன் ஆலயம் இருந்தது. அந்தக் கோவிலின் முன் யாரோ ஒரு வாலிபன் நின்று வெகுநேரம் வரை பிரார்த்தனை செய்து கொண்டிருப்பதை அண்ணாசாமி கவனித்தான்.

அவன் அவனருகே சென்று ''யாரப்பா நீ? இந்த ஊருக்குப் புதியவன் போலத் தெரிகிறதே. வெகு நேரமாக இங்கே நின்று இந்த அம்மனிடம் ஏதோ வேண்டிக் கொண்டிருக்கிறாயே. என்ன விஷயம்?'' என்று கேட்டான்.

அந்த இளைஞனும், ''ஐயா! நான் பக்கத்து ஊர்க்காரன் என் பெயர் மாணிக்கம். நன்றாகப் படித்தவன் ஆனால் வேலை எதுவும் கிடைக்காமல் திண்டாடிக் கொண்டிருக்கிறேன். போன வாரம் பட்டணத்தில் ஜமீன்தாரரின் பள்ளிக்கூடத்துத் தலைமை ஆசிரியரைப் பார்த்தேன். அவரும் ஆசிரியர் வேலையை எனக்குக் கொடுக்க ஏற்பாடு செய்வதாயும் ஆறுமாத காலம் தொடர்ந்து அந்த வேலையில் இருந்துவிட்டால் பிறகு நிரந்தரமாக ஆசிரியராக ஜமீன்தாரரின் பள்ளிகளில் ஏதாவது ஒன்றில் பணிபுரிய வாய்ப்பு கிடைக்கும் என்றார். நேற்று மறுபடியும் பட்டணத்துப் பள்ளியின் தலைமை

அதற்கு ஏற்றதுபோல ஜமீன்தாரர் அடுத்த நாள் அரசலூருக்கு வந்தார். அவரை அண்ணாசாமி கண்டபோது அவரே, ''உங்களைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். கொடையாளி என்றும், நன்கு படித்தவர் என்றும் அறிகிறேன். என் பட்டணத்துப் பள்ளிக் கூடத்தில் ஒரு ஆசிரியரின் வேலை காலியாக உள்ளது. அதற்கு நன்கு படித்தவரை நியமிக்க விரும்புகிறேன். நீங்கள் இந்த வேலையை ஏற்க வேண்டும். உங்களுக்கு எப்போது சௌகரியப்படுமோ அப்போது பணியில் நீங்கள் சேரலாம்,'' என்றார். அண்ணசாமியும் அந்த ஆசிரியர் வேலையை ஏற்பதாயும் சில நாட்களில் அப்பள்ளியில் பணியில் சேருவதாகவும் கூறினார்.

இதற்குப் பிறகு அண்ணசாமி ஒரு

ஆசிரியரைக் கண்டேன். அப்போது அவர் அந்த ஆசிரியர் வேலையை ஜமீன்தாரர் அண்ணாசாமி என்பவருக் குக் கொடுத்துவிட்டதாயும் அவரை எப்போது வேண்டுமானாலும் பணி யில் சேருமாறும் கூறிவிட்டாராம். அதைக் கேட்டு நான் திகைத்து 'அப்படியானால் எனக்கு வேலை கிடைக்காதா என்று கேட்டேன். தலைமை ஆசிரியரும் உனக்கு வேலை வேண்டும் என்றால் அந்த அண்ணாசாமி ஆறு மாதங்கள் கழிந்த பின் இங்கு வந்து வேலையில் சேர வேண்டும். அதற்கு ஏதாவது வழி இருக்கிறதா என்று பார்!' என்று சொல்லி அனுப்பிவிட்டார். எனக்கு எந்த வழியும் தெரியாததால் இந்த சக்திவாய்ந்த எல்லை அம்மனிடம் முறையிடுகிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட அண்ணாசாமி மாணிக்கத்திற்கு உதவுவது என்று தீர்மானித்துக் கொண்டான். அவர் அவர் அவனைத் தன்னோடு கூட்டிக் கொண்டு அப்போதே பட்டணத் திற்குப்போய் ஜமீன்தாரரின் பள்ளித் தலைமை ஆசிரியரைக் கண்டான்.

அவன், ''நான்தான் அண்ணா சாமி. என்னை இப்பள்ளியின் ஆசி ரியராக ஜமீன்தாரர் நியமித்து நான் விரும்பும்போது வேலையில் சேர லாம் என்று கூறியிருக்கிறார். நான் ஆறுமாதங்களுக்குப் பிறகே இங்கு வந்து அந்த வேலையை ஒப்புக் கொள்ளப் போகிறேன். அதுவரை நீங்கள் இந்த மாணிக்கத்திற்கு அந்த வேலையைக் கொடுங்கள்!'' என்றார்.



தலைமை ஆசிரியரும் மகிழ்ந்து மாணிக்கத்தைத் தன் பள்ளியில் ஆசி ரியராக நியமித்தார். மாணிக்கமும் அண்ணாசாமிக்குத் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டான்.

அண்ணாசாமி தம் ஊருக்கு வந்து தன் மனைவியிடம் தன் வேலையை மாணிக்கத்திற்கு வாங்கிக் கொடுத்த தைதக் கூறினான்.

அண்ணாசாமி ஆறுமாதங்களுக் குப் பிறகு அரசலூரைவிட்டே போய் விடப் போகிறான் என்ற விஷயம் அந்த ஊர் முழுவதும் பரவிவிட்டது.

அவன் ஊரைவிட்டுப் பட்டணத் திற்குப் போகக் கூடாது என்று ஊரார் திரண்டு வந்து அவனிடம் கூறினார் கள். ஆசிரியராகப் பணியாற்றத்தான் வேண்டும் என்று அவன் நினைத்தால் தம் ஊரிலேயே ஒரு பள்ளிக் கூடத்தை ஆரம்பித்து நடத்தலாம் என்று

அதற்குத் தாங்கள் உதவுவதாகவும் கூறினார்கள்.

அவர்களது அன்பு வலையில் சிக்கிய அண்ணாசாமி அவர்கள் கூறியதற்குக் கட்டுப்பட வேண்டிய தாயிற்று. ஊராரும் பள்ளிக்கூடம் கட்ட எல்லா ஏற்பாடுகளையும் செய்தனர். பள்ளிக்கூடமும் திறக்கப் பட்டது. அண்ணாசாமி அதன் ஆசி ரியராகப் பணியாற்றி வரலானார்.

இந்த விஷயம் ஜமீன்தாரருக் குத் தெரிய வந்தது. அண்ணாசாமி தான் கொடுத்த வேலையை உதறித் தள்ளிவிட்டு, ஒரு பள்ளிக் கூடத்தை அரசலூரில் ஆரம்பித்து அதன் ஆசி ரியராக இருந்து வருவது கேட்டு ஜமீன்தாரர் அண்ணாசாமி தன்னை அவமதித்துவிட்டதாகக் கோபம் கொண்டார்.

அவர் ஒரு அதிகாரியை அர சலூருக்கு அனுப்பி விவரங்களை சேகரித்து வரச் சொன்னார். அந்த அதிகாரி அரசலூருக்கு வந்து அப் பள்ளிக்கூடத்தைக் கண்டதும் திகைத் தார். ஏனெனில் அதற்கு ஜமீன்தார ரின் பெயர் சூட்டப்பட்டிருந்தது! அவர் மேலும் விசாரித்ததில் அண் ணாசாமி தன் இரு மகன்களின் படிப் பிற்காகப் பட்டணம் செல்லத் தீர் மானித்து ஜமீன்தாரரின் பள்ளியில் வேலை பார்க்க ஒப்புக் கொண்டது தெரிந்தது.

அது மட்டுமல்ல, வேலை கிடைக் காமல் திண்டாடிய மாணிக்கத்திற்கு விட்டுக் கொடுத்துவிட்டு ஆறுமாதங் களுக்குப் பிறகு அந்த வேலையில் சேர அண்ணாசாமி நினைத்திருந்தார் என்றும், அரசலூரில் உள்ளவர்கள் தாம் அவர் பட்டணத்திற்குப் போவ தைத் தடுத்து அதே ஊரில் பள்ளிக் கூடத்தை அமைத்து அவருக்குக் கொடுத்தார்கள் என்றும் அந்த அதி காரி தெரிந்து கொண்டார்.

அவர் போய் இதை எல்லாம் ஜமீன்தாரரிடம் தெரிவிக்கவே, அவர் மிகவும் மகிழ்ந்துபோய் அண்ணா சாமியின் பள்ளிக் கூடத்திற்கு மானி யங்களை அளித்ததோடு அண்ணா சாமியின் இருமகன்களும் பட்டணத் தில் படிக்கவும் ஏற்பாடு செய்தார்.





# மர்மக் குளம்

## 19

*(மர்மக்குள மகேஸ்வரன் சுருக்குக் கயிறை வீசி ஜெயசீலன் கழுத்தில் மாட்டினான். அதை அறுத்து விடுவித்துக் கொள்ள முயன்ற அவனிடம் மகேஸ்வரன் நயமாகப் பேசி காஞ்சனமாலையையும் ஜெயசீலனையும் மர்மக்குளத்திற்கு அழைத்துச் சென்றான். இந்த விஷயம் காடர்கள் வாயிலாக சித்தசாதகனுக்கு கனகாட்ச மன்னனிடம் பேசிக் கொண்டிருக்கும்போது தெரிந்தது. அதன் பிறகு)*

காடர்கள் தாம் கண்ட நீர்யானை, அதன் மீதிருந்தவன், முதலை முகத் தவன், ஓர் இளைஞன், இளம்பெண் ஒருத்தி ஆகியோரைப் பற்றி விவரமாகக் கூறினார்கள். அதைக் கொண்டு அந்த இளைஞன் ஜெய சீலனே என்று உறுதியாக நம்பினான். ஆனால் இளம்பெண் யாரென்று அவனால் ஊகிக்க முடியவில்லை.

சித்தசாதகன் கனகாட்சனிடம் ''அரசே! நான் இப்போதே போய் என் நண்பன் ஜெயசீலனை விடுவித்துக் கொண்டு வரவேண்டும். அவனை யாரோ பிடித்து இழுத்துக் கொண்டு போய்க் கொண்டிருக்கிறார்கள். ஆனால் மாவீரனான ஜெயசீலன் எப் படி அவர்களிடம் அகப்பட்டான்? இது ஆச்சரியமாக இருக்கிறதே'' என்றான்.

அப்போது மன்னன் ''சாதகா! ஜெயசீலனைக் காப்பாற்ற வேண்டி யது என் கடமை. நானும் நீயும் சில



வீரர்களுடன் செல்லலாம். சட்டென அவர்களைப் பிடித்து மர்மக் குளம் எங்கே இருக்கிறது என்று தெரிந்து கொள்ளவேண்டும். உன்னோடு உள்ள இந்த ஜலராட்ஸனிடமிருந்து ஏதாவது தெரிந்து கொள்ள முடியுமா?'' என்று கேட்டான்.

சித்தசாதகன் ஜலராட்சஸனிடம், ''அடே, நீ முன்பு மர்மக்குளவாசியாக இருந்தாயே. இப்போது அதைப் பற்றி விவரமாகச் சொல்!'' என்று அதட்டினான். அப்போது ஜல ராட்சஸன் கல்லாலான தன் கதையை சித்தசாதகனின் காலடியில் வைத்து ''பிரபுவே! நான் முன்பே சொல்லி இருக்கிறேனே மர்மக் குளம் இருக்கும் இடத்தை நான் சொன்னால் என் தலைவெடிக்கும். நான் இறந்துவிடுவேன். இது எங்களுக்கு இடப்பட்ட சாபம்'' என்றான்.

இதைக் கேட்ட சித்தசாதகன் பலமாகச் சிரித்து ''சாபமா? சும்மா ஏதோகதை விடுகிறாயா? இதை நான் நம்பிவிடுவேன் என்று நினைக்கிறாயா?'' என்று கேட்டான்.

ஜல ராட்சஸனோ ''இது பொய் யல்ல. உண்மையே. நான் மட்டும் அதைச் சொன்னால் இறந்தே போய் விடுவேன். ஒரு வேளை வாய்திறந்து வார்த்தைகளால் கூறாமல் கைகளால் ஜாடை காட்டித் தெரியப்படுத்தினால் ஒருவேளை நான் சாபத்திலிருந்து தப்பலாம்'' என்றான்.

சித்தசாதகனோ ''பயப்படாதே. நான் மகாகாலனின் பக்தன். என்னால் உன்னை எப்படிப்பட்ட சாபத்திலிருந்தும் காப்பாற்றிவிட முடியும். தைரியமாகச் சொல்!'' என்றான்.

ஜலராட்சஸனோ, ''நான் தரையில் வரைபடமாக வரைந்து தெரிவிக்கிறேன். வாய் வார்த்தைகளால் சொல்ல விரும்பவில்லை,'' என்று கூறி அங்கு கீழே கிடந்த ஒரு உலர்ந்த குச்சியை எடுத்துக் கொண்டான். அதைக் கொண்டு அவன் சில கோடுகளைக் கிழிக்கலானான்.

அப்போது அவன், ''பிரபுவே! என் தலை சுற்றுகிறது. தலைக்குள் ஏதோ அசைவுகள் ஏற்படுகின்றன. வலி தாங்க முடியவில்லை. என்ன செய்வேன்?'' என்று அலறினான்.

அதைக் கண்ட கனகாட்சகன் ''சாதகா! பாவம், இவன் உண்மையிலேயே இறந்துவிடுவான் போல் இருக்கிறதே!'' என்றான். சித்தசாதகனோ, ''அதெல்லாம் இல்லை. இவன் பயத்தால் உளறுகிறான். என்

மகாகாலனின் சக்தி இருக்கும்போது இவனை எந்த சாபமும் எதுவும் செய்துவிட முடியாது'' என்று மார் தட்டிக் கூறினான்.

அப்போது ஜலராட்சன் தான் கிழித்த கோடுகளைப் பற்றி விவர மாகக் கூறி முடிக்கவே, அவன் அலறியவாறே விழுந்துவிட்டான்.

சித்தசாதகன் உடனே அவன் மூக்கினருகே கை வைத்துப் பார்த்து விட்டு கனகாட்சனிடம் ''அரசே! பயத்தால் இவன் நினைவை இழந்து விழுந்துவிட்டான். இவன் உயிரோடு தான் இருக்கிறான்,'' எனக் கூறிவிட்டு அருகில் நின்ற காடனிடம் ''நீ போய் தண்ணீர் கொண்டு வா!'' என்றான்.

அந்தக் காடன் அசையாமல் நின் றான். அவனது தலைவன் காட்டான் பூசாரியைப் பார்க்கவே, அவனும் கனகாட்சனின் முன் வந்து வணங்கி ''அரசே! நாங்கள் காட்டில் வாழ் பவர்கள். எங்கள் நடத்தை பண்பாடு அற்றதாக இருக்கலாம். அதற்காக எங்களை மன்னித்துவிடுங்கள். இந்த ஜல ராட்சஸனைத் தூக்கி எங்கே யாவது எறிந்துவிட்டு இந்த சித்த சாதகனை எங்களிடம் விட்டுவிடுங் கள். இவனை எங்கள் ஆலமரத்து ஆண்டவன் எங்களுக்கு ஆகாரமாக அனுப்பியுள்ளார். எனவே இவனை பலியிட்டு அந்த நாங்கள் மாமிசத்தை உண்கிறோம்,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகன் ஆத் திரம் கொண்டு ஓடி அந்தப் பூசாரியின் குடுமியைப் பிடித்து உலுக்கி, ''அடே! மனித மாமிசமா உங்களுக்கு




வேண்டும்? முதலில் உன்னைக் கொன்று இந்தக் காடர்களின் முன் னால் வீசி எறிகிறேன். அவர்கள் உன் மாமிசத்தைத் தின்று மகிழட்டும்,'' என்று கூறி அவனைக் கொல்லத் தன் சூலத்தை உயர்த்தினான்.

அப்போது நீர் யானையின் மீது அமர்ந்து சர்ப்பநகன் வேகமாக அங்கு வந்து சேர்ந்தான். அவன் உரத்த குர லில் ''சாதகா! அவசரப்படாதே! சூலத்தைத் தாழ்த்து. இப்போது நாம் மர்மக்குளத்தில் வாழும் ஜல ராட் சஸர்களுடன் போராடவேண்டிய நிலையில் இருக்கிறோம். எனவே அவர்கள் நம்முடன் சமாதானமாகப் போகப் போகிறார்களா அல்லது போர் புரியப் போகிறார்களா என்று தீர்மானிக்க வேண்டும்,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகன் சூலத்தைத் தாழ்த்தி சர்ப்பநகனை



தரையில் கோடுகளைக் கிழித்து விவரித்தான். அப்போது தான் திடீ ரென மயக்கம் போட்டு விழுந்து விட்டான்,'' என்றான்.

இதற்குள் கனகாட்சனின் வீரர்கள் தண்ணீர் கொண்டு வந்து ஜல ராட் சஸன் மீது கொட்டினார்கள். குளிர்ந்த நீர் உடலில் பட்டதும் ஜல ராட்சஸன் கண் விழித்து மிரளமிரளப் பார்த் தான். பிறகு அவன் ''நான் எங்கே இருக்கிறேன்? பூலோகத்திலா அல் லது சொர்க்கலோகத்திலா?'' என்று கேட்டான்.

சித்தசாதகனோ, ''ஜலராட்சஸா! எழுந்திரு. உன்னை சாபத்திலிருந்து விடுவித்துவிட்டேன். இனிமேல் நீ பயப்படவே வேண்டாம்,'' என்று சிரித்துக் கொண்டே சொன்னான் ஜல ராட்சஸனும் எழுந்து உட்கார்ந்தான்.

அப்போது சர்ப்பநகன், ''எங்கள் வைத்திய தேவர் அடிக்கடி எங்கள் மன்னர் கனகாட்சர் என்று கூறுவார். அவர் தாங்கள்தாமா? வணக்கம்!'' என்று கூறி கைகூப்பி வணங்கினான்.

கனகாட்ச மன்னன் அவனது வாகனமான நீர் யானையும் அவனது விசித்திரத் தோற்றத்தையும் கொஞ்ச நேரம்வரை கண்கொட்டாமல் பார்த் தான். பிறகு சர்ப்பநகனிடம், ''யார் அந்த வைத்தியதேவர்? என் நாட்டுக் குடி மகனா?'' என்று கேட்டான்.

அதற்கு சர்ப்பநகன், ''அது எனக் குத் தெரியாது. அவரே இன்னும் சற்று நேரத்தில் வந்து விடுவார். ஏனெனில் அவர் என். பின்னாலேயே வந்து கொண்டிருந்தார்,'' என்றான்.

உற்றுப் பார்த்தான். இந்த சொற்ப நேரத்தைப் பயன்படுத்திக் கொண்டு காடர்களும் பூசாரியும் தப்பி ஓடி விட்டார்கள்.

சர்ப்பநகன் தன் குதிரை மீதிருந்து கீழே இறங்கி கீழே விழுந்து கிடக்கும் ஜல ராட்சஸனைப் பார்த்தான். பிறகு சித்தசாதகனிடம், ''இவன் உனக்கு அடங்கி பணிபுரிந்து கொண்டு இருந் தானே. இவன் இறந்தா போய்விட் டான்?'' என்று கேட்டான்.

சித்தசாதகனும், ''இவன் என் நம் பிக்கைக்குப் பாத்திரமான பணி யாளே. ஆனால் இவன் மர்மக்குள மகேஸ்வரனின் சக்திக்கு பயப்படு கிறான். அவன் ஏதோ சாபம் கொடுத் திருக்கிறானாம். அதை நினைத்து நடுங்குகிறான். அந்த மர்மக் குளம் எங்கே இருகிறது என்று கேட்டேன் அதை வாய் வார்த்தைகளால் சொல் லக் கூடாது எனக் கூறி இவன்

கனகாட்சனும், ''சாதகா! உனக்கு அந்த வைத்தியதேவரைப் பற்றி ஏதாவது தெரியுமா?'' என்று கேட்டான். சித்தசாதகனும் ''ஆம். தெரியும். ஆனால் இந்த ஜலராட்சஸன்களுக்கும் மர்மக்குள வாசிகளுக்கும் அவரும் ஜெயசீலனைப் போல அமராவதி நாட்டுக் குடிமகன்தான் என்பது தெரியாது'' என்றான்.

அதுகேட்டு கனகாட்சன் ''ஜெயசீலன் அமராவதிவாசியா? அதன் மன்னன் ருத்திரசேனன் பகைவன் ஆயிற்றே. நான் இப்போது பல பிரச்சினைகளில் சிக்கித் தவிக்கிறேன் என்பதை அறிந்து அவன் என் நாட்டின் மீது படை எடுத்துவர ஏற்பாடுகளைச் செய்து வருகிறான் என்று ஒற்றர்கள் வாயிலாகத் தெரிய வந்துள்ளது,'' என்றான்.

அப்போது சித்தசாதகன், ''அரசே! ஜெயசீலன் அமராவதிவாசி என்பதால் அவன் பகைவனின் கையாள் என்று எண்ணிவிடாதீர்கள். அவன் நேர்மையானவன். சொன்ன சொல் தவறாதவன். அரசகுமாரனையும் அரசகுமாரியையும் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து தங்களிடம் ஒப்படைப்பதாக அவன் வாக்களித்தான். அதை நிறைவேற்றவே முயன்று கொண்டிருக்கிறான். உங்கள் நாட்டுக்குடி மகனாகிய நான் அவனது நேர்மைக்கும் நல்ல எண்ணத்திற்கும் உத்தரவாதம் அளிக்கிறேன்,'' என்றான்.

இச்சமயத்தில் சற்று தூரத்தில் கூடி இருந்த காடர்களிடையே சலசலப்பு



ஏற்பட்டது. அதற்கு என்ன காரணம் என்று சித்தசாதகன் அந்தக் கூட்டத்தை நோக்கித் தன் பார்வையைச் செலுத்தினான்.

அப்போது காட்டானும் பூசாரியும் ஓடிவந்து ''ஐயா! உங்களைப் போன்ற பத்து பன்னிரெண்டு மனிதர்கள் ஜலராட்சஸர்களுடன் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். நாங்கள் மனிதர்களுக்கு உதவப் போகலாமா?'' என்று கேட்டார்கள்.

அப்போது சர்ப்பநகன், ''சாதகா! அந்த மனிதர்கள் வைத்தியதேவரும், என் தம்பியும், அன்னரதத்தை ஓட்டுபவனும் ஆவர்'' எனக் கூறியவாறே கிளம்பினான்.

சித்தசாதகனும் தன் சூலத்தை உயர்த்திக் கொண்டு ''ஜெய் மகாகாலா!'' என்று கோஷமிட்டவாறே சர்ப்பநகனுடன் புறப்பட்டான். காடர்களும், ''ஆலமர ஆண்டவனே!

எங்களுக்கு நிறைய மாமிசம் கிடைக் கச் செய்!'' என்று வேண்டியவாறே அவர்களுடன் கிளம்பிவிட்டார்கள்.

அவர்கள் சற்றுதூரம் சென்ற சர்ப் பஸ்வரன் தன் வாளால் ஜல ராட் சஸர்களைத் தாக்கி சிலரை காயப் படுத்தி வீழ்த்திக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். ஆனால் மற்றவர்கள் வைத்தியதேவனையும், தேரோட்டி யையும் அங்கஹீனனான மங்கள வர்மனையும் சிறைப்பிடிக்க முயன்று கொண்டிருந்தார்கள்.

வைத்தியதேவர் எனப்படும் தேவ சர்மா ரத்தினங்கள் பதித்த தன் கைத் தடியால் அவர்களைத் தடுத்து ''அடே! இதிலுள்ள முள் உங்களை குத்தினால் உங்கள் உடலில் விஷம் ஏறும். நீங்கள் மடிந்துவிடுவீர்கள்!'' என்று எச்சரித்தான்.

அப்போது சர்ப்பநகனும் சித்த சாதகனும் அங்கு வந்து சேர்ந்தார்கள். காடர்களும் கனகாட்சனின் வீரர் களும் கூச்சல் போட்டுக் கொண்டு வரவே ஜலராட்சஸர்கள் பயந்து பின் வாங்கலானார்கள். அவர்களது தலை வனோ, ''நில்லுங்கள் ஓடாதீர்கள்!'' என்று கூறியவாறே தேவசர்மாவைத் தாக்கினான். அவனை தேவசர்மா தன் கைத்தடியால் தொடவே அதன் முள் அத்தலைவனின் உடலில் குத்தியது. மறுநிமிடம் அவன் அலறி விழுந்து இறந்து போனான்.

அதைக் கண்ட ஜல ராட்சஸர்கள் பயந்து ஓட்டம் பிடித்தார்கள். சர்ப்ப நகன் குதிரை மீதிருந்து இறங்கி தேவசர்மனின் அருகே போய் ''இந்த ஜல ராட்சஸர்கள் போய் மர்மக்குள மகேஸ்வரனையும் காஞ்சனமாலை யையும் ஜெயசீலனையும் தாக்குவார் களே, அவர்களை எச்சரிக்க வேண் டாமா? என்று கேட்டான். தேவசர்மா வும் ''அந்த வேலையை நீயும் உன் தம்பியும், அன்னரதத்தை ஓட்டுபவ னும் செய்யுங்கள்,'' என்றான்.

சர்ப்பநகனும் சர்ப்பஸ்வரனும் நீர் யானை மீது அமர்ந்து வேகவேக மாகச் சென்றார்கள். காடர்களோ பயந்து ஓடும் ஜலராட்சஸர்களைத் துரத்திக் கொண்டு சென்றார்கள்.

*(தொடரும்)*



நவீன
வேதாளக்
கதை

# யாருக்குத் துணிச்சல்?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதைத் தூக்கிச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல் கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் விடாமுயற்சியாக ஏதோ ஒரு வேலையில் நீ ஈடுபட்டிருப்பதைப் பார்த்தால் நீ மிகவும் துணிச்சல் கொண் டவன் என்றே தெரிகிறது. துணிச்சலைப் பற்றி சொர்ண குமாரி என்ற அரசகுமாரி எடுத்த ஓர் அதிசய முடிவைப்



பற்றிக் கூறுகிறேன் கவனமாகக் கேள்!'' என்று கூறி அந்த அரசகுமாரி யின் கதையைச் சொல்லலாயிற்று.

சொர்ணகிரியை சொர்ணசிம்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது ஒரே மகள் சொர்ணகுமாரி. அவள் துணிகரச் செயல்கள் புரிபவர் களைப் பாராட்டியதோடு தன் தந்தை யிடம் ''தந்தையே! நான் மிகமிகத் துணிகரச் செயல் புரிபவரைத்தான் மணக்கப்போகிறேன். அவர் கல்லாத வராகவும் ஏழையாக இருந்தாலும் கவலைப்படமாட்டேன் இதை மட் டும் நினைவில் வைத்துக் கொள்ளுங் கள்,'' என்று அடிக்கடி கூறி வந்தாள்.

இந்த விஷயம் மெதுவாக மக் களிடையே பரவலாயிற்று. இதனால் பல இளைஞர்கள் துணிகரச் செயல் கள் புரிவதாக எண்ணிக் கொண்டு செயலில் இறங்கனார்கள். ஒருவன் ஆயிரம் அடி உயரமுள்ள மலை மீது ஏறி அதன் உச்சியிலிருந்து கீழே குதித்தான். அப்படிச் செய்ததில் அவ னது உடலில் ஒரு சிறு காயம்கூட ஏற்படவில்லை. இன்னொருவன் புயல் பலமாக வீசியபோது ஒரு படகில் நடுக்கடலுக்குப் போய் படகிலிருந்து குதித்து நீந்திக் கரைக்கு வந்தான். இன்னொருவன் எவ்வித ஆயுதத்தையும் எடுத்துக் கொள்ளா மல் ஒரு காட்டிற்குப் போய் அங்கு ஒரு கரடியுடன் சண்டைபோட்டு அதனை அடக்கி அதன் மீது ஏறி சவாரி செய்தவாறே தலைநகருக்கு வந்தான். இப்படியே பலர் பல செயல்களைத் துணிகரச் செயல்கள் என்று எண்ணிச் செய்தனர்.

இவற்றை எல்லாம் கேட்ட அரச குமாரி ''இந்தத் துணிகரச் செயல்கள் அவரவர்களுக்கு பெயரைக் கொடுக் கும். ஆனால் இவற்றால் மற்றவர் களுக்கு எவ்விதப் பயனும் இல் லையே!'' எனக் கூறி அவர்களுக்குச் சில பொற்காசுகளைப் பரிசாகக் கொடுத்து அனுப்பினாள்.

சொர்ணகிரியின் தலைநகருக்குப் பக்கமாக ஒரு ராட்சஸன் வந்து ஒரு ஆல மரத்தின் கீழ் தங்கினான். அப் போது பரமன் என்பவனும் சங்கரன் எனவும் இரு நண்பர்கள் அவனிடம் சிக்கிவிட்டார்கள். அது சமயம் ராட் சஸன் அவர்களிடம் ''எனக்கு மரக்கறி உணவுதான் மிகவும் பிடிக்கும். மாமி சத்தை அவ்வளவாக விரும்ப மாட் டேன். அதனால் உங்களில் ஒருவன் நகருக்குப் போய் நல்ல காய்கறி களைக் கொண்டு வரவேண்டும்.

மற்றவன் அவனது நண்பன் திரும்பி வரும்வரை என்னுடனேயே இருப்பான். நகருக்குப் போனவன் காய்கறிகளுடன் திரும்பி வராவிட்டால் வேறு வழியின்றி என்னுடன் இருப்பவனைக் கொன்று விழுங்கி என் பசியைத் தீர்த்துக் கொள்வேன்,'' என்றான்.

பரமன் தான் காய்கறிகளைக் கொண்டு வருவதாகக் கூறி நகருக்குள் சென்றான். சங்கரன் ராட்சஸனுடன் இருந்தான். பரமன் நகருக்குச் சென்று நிறையக் காய்கறிகளை ஏற்றிக் கொண்டு ராட்சஸன் இருக்கும் இடத்திற்கு வந்தான். அதைக் கண்டு ராட்சஸன் மிகவும் மகிழ்ந்துபோய் சங்கரனை விடுதலை செய்து அவர்கள் இருவரிடமும், நீங்கள் உங்கள் மன்னனிடம் போய் அவன் தினமும் ஒரு வண்டி நிறைய சைவ உணவு அனுப்பி வைக்க வேண்டும் என்று நான் சொன்னதாகத் தெரிவியுங்கள். என்று எனக்கு அம்மாதிரி உணவு வராமல் இருக்குமோ அன்று இந்த நாட்டையே பாழ்படுத்திவிடுவேன் என்பதையும் தெரிவியுங்கள்,'' என்று கூறி அனுப்பினான்.

இதைக் கேட்ட மன்னன் கோபம் கொண்டு அந்த ராட்சஸனைப் பிடித்துவரத் தன் படைகளை அனுப்பப் போவதாகக் கருவினான். அப்போது சொர்ணகுமாரி தன் தந்தையிடம் ''ஒரு ராட்சஸன் சைவ உணவு தான் வேண்டும் என்று கேட்பது வியப்பை அளிக்கிறது. இதில் ஏதோ ரகசியம் உள்ளது. இதை அறிய



துணிச்சல் உள்ளவனைத் தான் அனுப்ப வேண்டும். அவன் போய் விஷயத்தைத் தெரிந்து வரட்டும். அதுவரை ராட்சஸன் கோரியபடி தினமும் அவனுக்கு உணவை அனுப்பி வாருங்கள்,'' என்றாள்.

சொர்ணசிம்மனும் தன் மகள் சொர்ணகுமாரி கூறியபடியே ராட்சஸனுக்கு உணவை அனுப்பி வைத்தான். அதோடு ராட்சஸனை கண்டு பேசிவர யார் முன்வருகிறார்கள் என்று பறைசாற்றுவித்தான்.

பல இளைஞர்கள் ஆர்வத்துடன் போய் ராட்சஸனைக் கண்டார்கள். அவன் அவர்களிடம், ''நான் உண்மையில் ஒரு தேவ புருஷனே. ஒரு சாபத்தால் இவ்வாறு ராட்சஸனானேன். என் சாபம் விலக ஒரு வழி உள்ளது. இந்த நகருக்கு வடக்கே உள்ள மலையில் பாழடைந்த ஒரு கோவில் உள்ளது. அதில் ஒரு சுரங்கப் பாதை



உள்ளது. அதில் விஷப்பாம்புகளும் பெரிய தேள்களும் உள்ளன. அந்தப் பாதையின் முடிவில் ஒரு குழியில் நெருப்பு எரிந்து கொண்டிருக்கும். அதைத் தாண்டியதும் ஒரு பயங்கர மலைப்பாம்பு தென்படும். அதன் வயிற்றில் ஒரு மோதிரம் உள்ளது. அதை எடுத்து வந்து என் மோதிர விரலில் போட்டால் என் சாபம் விலகிவிடும். நான் தேவனாகிவிடு வேன். இதை யார் செய்யப் போகி றீர்கள்?' என்று கேட்டான்.

அதைக் கேட்ட இளைஞர்களுக்கு உதறல் கண்டது. இது நம்மால் முடியாது என்று எண்ணி அங்கிருந்து போய்விட்டார்கள். ஆனால் ஜெய வீரன் என்ற இளைஞன் அதைச் செய்யத் தீர்மானித்தான். அவன் அரச வம்சத்தவன். சொர்ணகுமாரியை மணக்க ஆசைப்பட்டான். ஆனால் அவனால் துணிச்சலான செயல் எதையும் செய்ய முடியாது. எனவே அவன் ஒரு மந்திரவாதியின் உத வியை நாடினான்.

மந்திரவாதியும் ஜெயவீரனிடம் ஒரு தாயத்தைக் கொடுத்து ''இந்த கருப்புநிறத் தாயத்தை யார் கையில் கட்டினால் இது பச்சை நிறமாக மாறுகிறதோ அவனால் மூன்று ஆபத்துகளிலிருந்து தப்பித் துணிகரச் செயலைச் செய்ய முடியும். நீ கட்டிப் பார். அப்போது இதன் நிறம் மாறா விட்டால் இதை மற்றவர் கைகளில் கட்டிப்பார். யார் கையில் கட்டியதும் இது பச்சையாக மாறுகிறதோ அவ னைக் கொண்டு உன் ஆசையை நிறை வேற்றிக் கொள்!'' என்றார்.

தாயத்தை வாங்கிக் கொண்டதும் ஜெயவீரன் ஆவலுடன் அதைத் தன் கையில் கட்டிக் கொண்டு பார்த்தான். அதன் நிறம் மாறவில்லை. ஆனால் மனம் தளர்ந்துவிடாமல் ஊர்ஊராக அலைந்து பல இளைஞர்களின் கைகளில் தாயத்தைக் கட்டிப் பார்த் தான். அதன் நிறம் மாறவே இல்லை. அப்போதும் ஜெயவீரன் மனம் தள ராமல் மேலும் முயற்சி செய்தான். அவன் சத்தியன் என்ற இளைஞ னின் கையில் அந்தத் தாயத்தைக் கட்டிய போது அது பச்சை நிறத்தை அடைந்தது. ஜெயவீரன் மகிழ்ந்து போனான்.

சத்தியன் இளைஞன். நன்கு படித் தவன். ஏழை. வேலை ஏதும் கிடைக் காமல் திண்டாடிக் கொண்டிருந்தான். நடுங்குபவன். யாராவது சண்டை போட வந்தால் பயந்து ஓடிவிடுவான்.

அவ்வூரார் அவனை பயந்தாங்குள்ளி என்றே சொல்லி வந்தார்கள்.

ஜெயவீரன் ராட்சஸனைப் பற்றிச் சொல்லி அவனது சாபம் விலக அவன் உதவ வேண்டும் என்று கூறினான்.

அதைக் கேட்ட சத்தியன் ''ஐயோ! விஷப்பாம்புகளும் தேள்களும் மலைப் பாம்புமா? நினைத்தாலே குடல் நடுங்குகிறதே. என்னால் முடியவே முடியாது'' என்றான். ஜெயவீரன் முதலில் நயமாகவும் பிறகு பயம் காட்டியும் சத்தியனை ஒருவாறு சம்மதிக்க வைத்தான். சத்தியனும் தாயத்து தன் கையில் கட்டப்பட்டதால் தனக்கு எவ்வித ஆபத்து வந்தாலும் சமாளித்து விடலாம் என்று நம்பினான்.

அவன் ஜெயவீரனுடன் பாழடைந்த கோவிலுக்குச் சென்றான். அங்கு சுரங்கப் பாதையில் சென்ற போது விஷப் பாம்புகளும் எருமைத் தேள்களும் அவனை ஒன்றும் செய்ய வில்லை. அதனால் தைரியத்துடன் நெருப்புக் குழியைத் தாண்டி மலைப் பாம்பின் வாயில் நுழைந்து அதன் வயிற்றில் இருந்த மோதிரத்தை எடுத்துக் கொண்டு வந்த வழியே போய் சுரங்கப் பாதையின் நுழை வாசலில் நிற்கும் ஜெயவீரனைக் கண்டு மோதிரத்தை அவனிடம் கொடுத்தான்.

ஜெயவீரனும் ''சரி, என்னுடன் வா. ராட்சஸனைப் பார்க்கலாம்,'' எனவே சத்தியனோ, ''நான் வர மாட்டேன். நீ போ!'' எனக் கூறிவிட்டான். அதனால் ஜெயவீரன் அங்கிருந்து



போய் அரசகுமாரியைக் கண்டு அந்த மோதிரத்தைக் கொடுத்து ''இதை எடுத்துவர துணிச்சலுடன் நான் ஒருவனே சுரங்கப் பாதையில் விஷப் பாம்புகளையும் எருமைத் தேள்களையும் லட்சியம் செய்யாமல் போய், நெருப்புக்குள் தாண்டி, மலைப் பாம்பின் வாயில் நுழைந்து அதன் வயிற்றினுள் போய் அங்கிருந்த இந்த மோதிரத்தை எடுத்து வந்தேன். இதை நீ ராட்சஸனிடம் கொடு. அவன் சாபம் விலகி தேவனாகி விடுவான்,'' என்றான்.

சொர்ணகுமாரி அந்த மோதிரத்தை வாங்கிப் பார்த்து ஆச்சரியத்துடன் ''நீயா இந்தத் துணிகரச் செயல்களைப் புரிந்தாய்?'' என்று கேட்கவே, அவன் 'ஆம்' என்பது போலத்தலையை ஆட்டினான். சொர்ணகுமாரி அப்போதே தன் தந்தையையும் ஜெயவீரனையும் கூட்டிக் கொண்டுபோய்



காட்டிலுள்ள ராட்சஸனைப் பார்த்தாள். அவனிடம் அவள் மோதிரத்தைக் கொடுக்கவே, அவனும் அதைத் தன் விரலில் அணிந்து கொண்டான். மறுவிநாடியே அவன் தேவனாக மாறிவிட்டான்.

அப்போது அவன் சொர்ண குமாரியிடம் ''உன்னை மணப்பவன் மிகவும் துணிச்சல் கொண்டவனாக இருக்க வேண்டும் என்றுதானே விரும்புகிறாய். இதற்கு ஒரு பரீட்சை வை. இங்கிருந்து சற்று தூரத்தில் ஓர் இறங்கு கிணறு உள்ளது. அதில் ரத்தினங்கள் பதிக்கப்பட்ட வளையல் உள்ளது. அதை மூன்றுப் பயங்கர பூதங்கள் காத்து வருகின்றன. யார் அந்த வளையலை எடுத்து வந்து உன்னிடம் கொடுக்கிறானோ, அவனையே நீ மணந்து கொண்டு சுகமாக இரு!'' எனக் கூறிவிட்டு மறைந்து போனான்.

சொர்ணகுமாரி ஜெயவீரனிடம், ''இவ்வளவு துணிகரச் செயல்களைப் புரிந்த நீ இதையும் செய்து அந்த வளையலை எடுத்துக் கொண்டு வந்து கொடு. உன்னை மணந்து கொள்கிறேன்,'' என்றாள். ஜெயவீரனும் அதையும் செய்வதாகக் கூறிவிட்டு அங்கிருந்து சென்று மறுபடியும் சத்தியனைப் பார்த்து அரசகுமாரியின் விருப்பத்தைக் கூறி அவன் தனக்கு உதவ வேண்டும் என்று கோரினான்.

அவனும் ''அந்தக் கிணற்றில் ரத்தின வளையலைத் தவிர வேறு எதுவும் இல்லை என்றால் நீயே அதில் இறங்கி வளையலை எடுத்து வரலாமே!'' என்றான்.

அப்போது ஜெயவீரன், ''அந்த வகையை அவனது மோதிரத்தை எடுத்து வந்தவனின் கண்களுக்கு மட்டுமே தெரியும் என்று கூறிவிட்டு அந்த தேவன் மறைந்து போனான். அதனால்தான் உன்னிடம் வந்தேன்,'' என்றான்.

சத்தியனும் ''சரி நான் உனக்கு உதவுகிறேன்,'' எனக் கூறி அவனோடு அந்த இறங்கு கிணறு இருக்கும் இடத்திற்குச் சென்றான். அதில் அவன் இறங்கி ரத்தின வளையலை எடுத்தான். அங்கு அவனைத் தடுக்க எந்த பூதமும் இருக்கவில்லை. சத்தியன் கிணற்றிலிருந்து வெளியே வந்து ஜெயவீரனிடம் அந்த வளையலைக் கொடுத்தான்.

ஜெயவீரனும் அதை வாங்கிக் கொண்டு, ''சத்தியா எனக்காகப் பல துணிகரச் செயல்களைச் செய்து

ராட்சஸனுக்குக் கொடுக்க மோதிரத்தைக் கொண்டு வந்தாய். இப்போது இந்த வளையலை எடுத்து வந்தாய், இந்தக் கிணற்றில் பூதங்கள் உள்ளன என்பதை நான் உன்னிடம் கூறாமல் மறைத்துவிட்டேன். ஆனாலும் உனக்கு...'' என்று ஏதோ சொல்லப் போனான்.

அப்போது திடீரென சொர்ண குமாரி தன் தந்தையுடன் அவர்கள் முன்வந்து ''பேஷ், ஜெயவீரா! இது தான் உன் துணிச்சலின் லட்சணமா? நீ மோதிரத்தை எடுத்து வந்ததாகக் கூறியதை நான் நம்பாததால் இந்த வளையல் விஷயத்தில் என்ன செய்கிறாய் என்று கண்காணித்தேன். உன் குட்டு வெளிப்பட்டு விட்டது. நீ துணிச்சலுடன் செயல்படவில்லை. உண்மையான துணிச்சல்காரன் சத்தியனே. அவனைத்தான் நான் மணந்து கொள்ளப் போகிறேன்,'' என்றான். ஜெயவீரன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு நின்றான்.

வேதாளம் இதைக் கூறி ''மன்னனே'' ஜெயவீரன் ராட்சஸனுக்கு மோதிரத்தைக் கொடுக்கத் திட்டம் தீட்டினான். அதனால்தானே சத்தியனால் மோதிரத்தையும் வளையலையும் எடுத்துவர முடிந்தது. எனவே ஜெயவீரனை புறக்கணித்து சத்தியனை மணக்கப்போவதாகக் கூறியது சரியா? இதற்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ அதை கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகிவிடும் என்றது.

விக்கிரமனும் 'ஜெயவீரன் தான் செய்யாத செயல்களைத் தானே செய்ததாகக் கூறியதால் அவன் துணிச்சல்காரன் அல்ல என்றாகிவிட்டது. சத்தியன் முன்பு எப்படிப்பட்டவனாக இருந்தாலும் இந்த விஷயத்தில் வந்தது வரட்டும் என்று பயமின்றி துணிச்சலுடன் செயல்பட்டான். எனவே ஜெயவீரனைவிட சத்தியனே துணிச்சல் மிக்கவன் என அரசகுமாரி முடிவு செய்தது சரியே!'' என்றான்.

விக்கிரமனின் சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக்கிளம்பிப் போய் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிவிட்டது.








## சமஸ்கிருதம் பேசும் கிராமம்

ராஜஸ்தான் மாநிலத்து பன்ஸ்வாடா மாவட்டத்திலுள்ள கனோடா என்ற கிராமம் பத்து ஆண்டுகளுக்குமுன் வரை மற்ற கிராமங்களைப் போலத்தான் இருந்தது. ஆனால் இந்தப் பத்து ஆண்டுகளில் திடீரென பெரிய மாற்றம் அங்கு ஏற்பட்டுள்ளது. இங்குள்ளவர்களின் தாய்மொழி வாக்டி என்றாலும் பெரும்பாலானோர் சமஸ்கிருதத்திலேயே பேசுகிறார்கள். வீடுகளிலும் கடைத்தெருக்களிலும் யாவரும் சமஸ்கிருதத்தில் பேசுகிறார்கள். வீட்டுச் சுவர்களில் சமஸ்கிருத சுலோகங்கள் எழுதப்பட்டுள்ளன. பல வீடுகளில் ஒட்டப்பட்டுள்ள சுவரொட்டிகளில் சமஸ்கிருதத்தில் வாழ்த்துக்களையும் வாக்கியங்களையும் காணலாம். சமஸ்கிருத சுலோகங்கள் கூறப்படுவதையும் கேட்கலாம். இங்குள்ள ஆரம்பப் பள்ளிகளும் உயர்நிலைப் பள்ளியும் சமஸ்கிருதத்தைக் கற்பிக்கின்றன. சமஸ்கிருதக் கல்லூரி ஒன்றும் இங்கு உள்ளது.

## மன்மதனுக்கு வழிபாடு



வடகேரளத்தில் மார்ச், ஏப்ரல் மாதத்தில் இளம்பெண்கள் இந்தியப் புராணங்களில் கூறப்படும் மன்மதனை பொம்மைகளாக வடிவாக்கி வழிபடுகிறார்கள். சிவபெருமான் தவம் செய்து கொண்டிருக்கும்போது மன்மதன் அவரது தவத்தைக் கலைக்கவே, அவர் கோபம் கொண்டு தம் நெற்றிக் கண்ணைத் திறந்து அவனை எரித்துச் சாம்பலாக்கி விட்டாராம். இதுகண்டு மன்மதனின் மனைவி ரதிதேவி சிவபிரானிடம் தன் கணவனை உயிர்ப்பித்துத் தரும்படி கோரினாள். ரதி வழிபட்ட இதை பூரம் பண்டிகை என இன்றும் கொண்டாடப்படுகிறது.

# புதியவர் கூறிய பழம்

வாரணாசியிலிருந்து சற்று தூரத்திலுள்ள சாரநாத்தில் ஒரு புதிய பௌத்த விஹாரம் தோன்றியது. அந்த விஹாரத்தைத் தோற்றுவித்தவர் கபில வஸ்துவின் மன்னரின் மகனான கௌதமர் என அறிந்ததும் அப்பகுதி மக்கள் மிகவும் ஆச்சரியப்பட்டார்கள். அவரை அவரது சீடர்கள் புத்தர் என்றே அழைத்து வந்தார்கள்.

புத்தரும் அவரது சீடர்களும் துறவிகள் போலத்தான் வாழ்ந்து வந்தார்கள். காலையில் தியானம் செய்தபின் அவர்களில் சிலர் அங்கிருந்து பிரிந்து நான்கு திசைகளிலும் செல்வார்கள். ஒருவர் மேற்குப் பக்கத்து கிராமத்திற்குச் சென்றால் மற்றவர் வடக்கில் உள்ள கிராமத்திற்குச் செல்வார். இவர்கள் பிக்குகள் என அழைக்கப்பட்டனர். ஒரு பிக்கு ஒரு வீட்டின் முன் அந்த வீட்டுக்காரர் தம்மைப் பார்க்கும்வரை கையில் திருவோட்டுடன் நிற்பார். அவர் அவ்வீட்டுக்காரரிடமிருந்து உணவுப் பொருளை எதிர்பார்க்கிறார் என்பது இதன் பொருள். அநேகமாக எல்லோருமே அத்திருவோட்டில் அரிசியையோ அல்லது ஏதாவது உணவுப் பொருளையோ போடுவார்கள். ஆனால் எந்த வீட்டுக்காரனாவது இல்லை என்று தலையை ஆட்டினால் பிக்கு





மௌனமாக அடுத்த வீட்டிற்குச் சென்றுவிடுவார்.

சில சமயங்களில் வாரணாசி மக்கள் சாரநாத் விஹாரத்தைக் காண வருவார்கள். அவர்கள் புத்தரைக் கண்டு வணங்கி நிற்பார்கள். புத்தரும் தம் கோட்பாடுகளை அவர்களுக்கு விவரித்துக் கூறுவார்.

மேலும் அவர்கள் கேட்கும் வினாக்களுக்கு பொறுமையுடன் விடையளித்து அவர்களது சந்தேகங் களைப் போக்குவார். மக்களும் அவர் கூறுவதை மிகவும் பக்தி சிரத்தை யுடன் கேட்பார்கள்.

சாரநாத்திற்குப் பக்கத்தில் ஒரு வட்டிக் கடைக்காரன் இருந்தான். அவன் ஒருநாளும் பௌத்த விஹா ரத்திற்குச் சென்றதும் இல்லை, புத்தரைத் தரிசித்ததும் இல்லை. ஆயினும் அவரை வெறுத்து வந்தான். புத்தரின் உபதேசங்களை மக்கள் கேட்டு அதன்படியே நடந்து கொண் டால் அவர்களுக்கு உலக வாழ்க்கை மீது வெறுப்பு ஏற்படும். அப்போது அவர்கள் பணம் சம்பாதிக்க முயல மாட்டார்கள். மக்களுக்குப் பணமே தேவைப்படாவிட்டால் அவனது வட்டிக் கடை எப்படி நடக்கும்? இதை நினைக்கநினைக்க அவனுக்கு புத்தர் மீது கோபம் கோபமாக வந்தது.

ஒருநாள் காலையில் அந்த வட்டிக் கடைக்காரன் ஆற்றில் குளிக்கச் சென்று கொண்டிருந்தான். அப்போது தன் வீட்டுவாசலில் ஓர் இளம் வயதுத் துறவி நிற்பதைக் கண்டான். உடனே அவன் கோபம் கொண்டான். அவன் கொடுப்பதற்கு ஒன்றும் இல்லை எனக் கூறுவதுபோலத் தலையை அசைத்திருந்தால் அந்த இளம் துறவி அங்கிருந்து போயிருப்பார். ஆனால் அத்துறவிக்குப் பாடம் கற்பிக்க வேண்டும் என நினைத்தான்.

அதனால் அவரைப் பார்த்து ''ஏய்! நீ உண்மையில் யார் என்று உனக்கு விளங்க வைக்கிறேன். நீ ஓர் ஊர்சுற்றி. உதவாக்கரை. ஒரு பைசாவிற்குக் கூட உபயோகப்படாதவன். தெரிந்ததா?'' என்று உரக்கக் கத்தினான்.

ஆனால் அந்தத் துறவியோ அந்த ஏசலைக் கேட்டு எதுவும பேசா மலேயே இருந்தார். இதனால் வட்டிக் கடைக்காரனின் கோபம் மேலும் அதிகரித்தது. அதனால் அவரை அடித்துவிடுபவன் போலக் கையை ஓங்கி அந்தத் துறவியை நோக்கி வசவு களைப் பொழிந்து கொண்டிருந்தான். அதனால் அங்கு ஒரு கூட்டமே கூடி வேடிக்கை பார்க்கலாயிற்று.

வட்டிக் கடைக்காரன் இப்படியே ஒரு மணிநேரம் கத்திக் கொண்டு இருந்தான். அப்போதும் அந்தத் துறவி எதுவுமே பேசாமல் நிற்கவே வட்டிக் கடைக் காரன் அவர் பக்கம் போய் உற்றுப் பார்த்தான். அவரது அமைதியான தோற்றம் அவனை வசீகரித்தது. தான் எப்படிக் கத்தியும் அவர் பேசாமல் நின்றது கண்டு அவன் ஆச்சரியப்பட்டான்.

பிறகு அவன் ''ஏன் பேசாமல் நிற்கிறாய்? வாய் திறந்து எதையாவது சொல்!'' என்றான்.

இளம் துறவி புன்னகை புரிந்து தன் தொங்கு பையிலிருந்து ஒரு பழத்தை எடுத்து ''நண்பரே! நான் இதனை உமக்குக் கொடுத்து, நீங்கள் அதை ஏற்க மறுத்துவிட்டால் இது எங்கே போகும்?'' என்று கேட்டார்.

அதற்கு வட்டிக் கடைக்காரன் ''இது என்ன கேள்வி? அது வேறு எங்கும் போகாது. உன்னிடமே தான் இருக் கும்,'' என்றான்.

இளம் துறவியும் ''மிகவும் சரியே. நீர் சொன்னதை எல்லாம் நான் ஏற்கவில்லை. எனவே அவை யாவும் உமக்கே தான்,'' என்றார். அதைக் கேட்டு வட்டிக் கடைக்காரன் திகைத் துப் போனான். தான் திட்டியதெல் லாம் தனக்கேதான் என அறிந்ததும் அவன் வெட்கிப்போனான்.

அப்போது கூட்டத்தில் நின்ற சிலர் இளம் துறவியைஅடையாம் கண்டு ''ஆ! புத்தபிரானா!'' என்று கூறி வணங்கினார்கள். வட்டிக் கடைக் காரனும் அவரை வணங்கி நின்றான்.





# பயன்படுத்தவில்லையே!

வேம்பூரில் வேலப்பன் என்ற விறகுவெட்டி தினமும் காட்டிற்குப் போய் விறகுவெட்டி அதை விற்றுத் தன் பெரிய குடும்பத்திற்கு அரை வயிறு, கால் வயிறு கஞ்சி கிடைக்கச் செய்து வந்தான். ஏதாவது ஒரு தேவதை வந்து கூரையைப் பிளந்து தங்க நாணயங்களைக் கொட்டாதா என்று ஏங்கிக் கொண்டிருந்தான்.

ஒருநாள் காலையில் அவன் காட்டிற்குப் போய் ஒரு பெரிய மரத்தைக் கண்டு அதை வெட்டத் தன் கோடாலியை உயர்த்தினான். அப்போது அதை அவனை யாரோ பிடித்து நிறுத்தியது கண்டு ஆச்சரியத்துடன் பார்த்தான்.

அப்படிச் செய்தது அந்த மரத்தின் தேவதை. அது வேலப்பனைப் பார்த்து ''நான் இந்த மரத்தின் தேவதை. இதை வெட்டாதே! பல ஆண்டுகளாக நான் இதில் இருக்கிறேன். உன் வறுமை பற்றி எனக்குத் தெரியும். உனக்கு மூன்று வரங்கள் கொடுக்கிறேன். நீ வீட்டிற்குப் போய் தினமும் ஒரு வரம் வீதம் நீ கேள். அது பலிக்கும்,'' என்றது.

வேலப்பனும், ''இந்த மரத்தை வெட்ட மாட்டேன். நீ கொடுத்த மூன்று வரங்களைக் கேட்டுப் பயன் அடைகிறேன்,'' என்று கூறிவிட்டு வீட்டிற்குச் சென்றான்.

மறுநாள் காலையில் அவன் தனக்கும் தன் குடும்பத்தவருக்கும் விருந்து சாப்பாடு வேண்டும் என்று வரம் கேட்டான். ஆனால் அரைமணி நேரமாகியும் எதுவும் வரவில்லை.

ஆனால் சற்று நேரத்திற்குப் பிறகு எதிர்வீட்டு ஏழுமலை பல பாத்திரங்களில் உணவை எடுத்து வந்து ''வேலப்பா! இன்று என் வீட்டில் விசேஷ பூஜை நடந்தது. உனக்கும் உன் குடும்பத்தினருக்கும் வடை, பாயசத்துடன் சாப்பாடு கொண்டு வந்திருக்கிறேன்,'' என்றான்.

- பாபநாசம் சாமா -

வேலப்பனோ, ''ஏழுமலை! உன் சாப்பாடு வேண்டாம். ஏனெனில் இன்னும் சற்றுநேரத்தில் எனக்கு விருந்து சாப்பாடு கிடைக்கப் போகிறது,'' என்று சொல்லவே ஏழுமலை தான் எடுத்துக் கொண்டு வந்த சாப்பாட்டைத் தன் வீட்டிற்கே எடுத்துக் கொண்டு போய்விட்டான்.

வேலப்பன் விருந்து சாப்பாட்டை தேவதை கொடுக்கப்போகிறது என்று எதிர்பார்த்து அன்று முழுவதும் காத்திருந்தான். ஆனால் எதுவும் வரவில்லை. எனவே அன்று முழுவதும் அந்தக் குடும்பமே பட்டினியுடன் இருக்க வேண்டியதாயிற்று.

முதலாவது வரம் தான் பலிக்கவில்லையே! இரண்டாவது வரமாவது பலிக்கிறதா என்று பார்க்கிறேன் என்றுவேலப்பன் எண்ணி மறுநாள் அவன் தனக்கு எல்லா வசதிகளுடனும் கூடிய பெரிய மாளிகை ஒன்று கிடைக்க வேண்டும் என்று வரம் கோரினான். ஒரு மணிநேரம் கழிந்தும் தன் வீடு பெரிய மாளிகையாக மாறவில்லையே என்று அவன் கவலைப்பட்லானான்.

அப்போது அவன் வீட்டிற்கு முன்பின் அறிந்திராத ஒருவன் வந்து ''ஐயா! நான் உங்கள் பெரியப்பாவின் ஊரிலிருந்து வருகிறேன். இப்போது அவர் மரணப் படுக்கையில் இருக்கிறார். உங்களைக் கையோடு கூட்டி வரச் சொன்னார்,'' என்றான்.

வேலப்பனோ தேவதை கொடுத்த மூன்று வரங்களும் பலித்த பிறகே தன் வீட்டைவிட்டு வெளியில்



செல்ல வேண்டும் என்று தீர்மானித்திருந்ததால் அன்று இரண்டாவது வரத்தால் ஒரு பெரிய மாளிகையே அடையப் போவதாக அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்ததால் வந்தவனிடம் ''நான் ஒரு முக்கியமான வேலையில் ஈடுபட்டிருப்பதால் இப்போது வர இயலவில்லை. இதை என் பெரியப்பாவிடம் சொல்லுங்கள்,'' என்று கூறி அவனை அனுப்பி விட்டான்.

தன் பிறகு அவன் அன்று மாலை வரை தன் வீடு பெரிய மாளிகையாக மாறிவிடும் என எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தான். ஆனால் அது அப்படி ஆகவில்லை. அன்றுஅவன் குடும்பம் அரை வயிற்றுக் கஞ்சிதான் காய்ச்சிக் குடித்தது.

தேவதையின் இரண்டு வரங்களும்



பலிக்கவில்லையே என்று யோசித்த வாறே மூன்றாவது நாள் தனக்கு லட்சம் தங்க நாணயங்கள் கிடைக்கு மாறு செய்ய வேண்டும் என்ற வரத்தை வேலப்பன் கேட்டான். அவன் அதற்காகச் சற்றுநேரம் காத்துக் கொண்டிருந்தான்.

அப்போது ஜமீன்தாரரின் ஆள் வந்து "வேலப்பா! ஜமீன்தாரர் உன்னை இப்போதே அழைத்துவரச் சொன்னார். வா, என்னுடன்," என்று கூற வேலப்பன் பயந்து போனான். ஏனெனில் ஜமீன்தாரருக்குச் சொந்த மான ஒரு மரத்தை சில நாட்களுக்கு முன் திருட்டுத்தனமாக வெட்டிக் கொண்டிருந்தான்.

அப்போது ஜமீன்தாரரின் வீரர்கள் அதைப் பார்த்து அவனைப் பிடிக்க வந்தார்கள். வேலப்பனோ அவர் களுக்கு அகப்படாமல் தப்பிவிட் டான். அந்த குற்றத்திற்காக அவர் தண்டனை கொடுக்கவே தன்னை அழைக்கிறார் எனறு எண்ணினான்.

அவன் ஜமீன்தாரரின் ஆளிடம் "ஐயா! என் பெரியப்பா அவர் ஊரில் படுத்த படுக்கையாக இருக்கிறார். அவரது உடல்நிலை மோசமாகி விட்டது. இப்போது அந்த ஊருக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். அங் கிருந்து நேராக வந்து ஜமீன்தாரரைப் பார்க்கிறேன்," என்று சொல்லி அனுப்பினான். அதற்குப் பிறகு அன்று முழுவதும் காத்துப் பார்த்தும் லட்சம் தங்க நாணயங்கள் கிடைக் கவே இல்லை.

மர தேவதை ஏமாற்றிவிட்டது என்று ஆத்திரம் கொண்டு கோடாலி யுடன் காட்டிற்குப் போய் தேவதை வாழும் மரத்தை வெட்டச் சென் றான். அப்போது தேவதை அவன் முன் தோன்றி "என்ன வேலப்பா! ஏன் வெட்ட வந்தாய்? நான்தான் உனக்கு மூன்று வரங்கள் கொடுத் தேனே!" என்றது. வேலப்பனோ, "நீ கொடுத்த வரங்களில் ஒன்றுகூட பலிக்கவில்லை," என்று வெறுப் போடு கூறினான்.

தேவதையும் "ஏன் பலிக்க வில்லை? நீ கோரியபடி விருந்து சாப்பாட்டை உன் எதிர்வீட்டு ஏழு மலையிடம் கொடுத்து அனுப்பி வைத்தேனே! உன் பெரியப்பாவைக் கொண்டு அவர் இறக்குமுன் உனக்கு எல்லா வசதிகளும் கொண்ட அவரது

பெரிய மாளிகையைக் கொடுக்க ஏற்பாடு செய்தேனே! ஆனால் நீ தானே இவற்றை வேண்டாம் என்று நிராகரித்துவிட்டாய்? அதற்கு நானா பொறுப்பு?'' என்று கேட்டது.

அப்போது வேலப்பன் ''நீயா இவற்றைச் செய்தாய்? இது தெரியாமல் நிராகரித்தேனே! ஆனால் மூன்றாவது வரம் நிறைவேறவே இல்லையே?'' என்று அழாத குறையாகக் கேட்டான்.

அதற்கு தேவதை, ''அதையும் ஜமீன்தாரரைக் கொண்டே பலிக்க ஏற்பாடு செய்தேன். நீ அவரது மரத்தைத் திருட்டுத்தனமாக வெட்ட முயன்று அவர்களது வீரர்களிடம் அகப்படாமல் தப்பிவிட்டாய். பாதி வெட்டப்பட்ட அந்த மரத்தை முழுவதுமாக வெட்டிவிடும்படி ஜமீன்தாரர் தன் ஆட்களுக்குக் கட்டளை இட்டார். அம்மரத்தின் கீழ் லட்சம் தங்க நாணயங்கள் கிடைக்கவே அவற்றை உனக்குக் கொடுக்க எண்ணியே அவர் உன்னை அழைத்துவர ஆளை அனுப்பினார். நீயோ பயத்தால் போகவில்லை. அதனால் நீ அவரை லட்சியம் செய்யவில்லை என நினைத்து அந்தப் பணத்தை ஒரு வேத பாடசாலைக்குக் கொடுத்து விட்டார்,'' என்றது.

இதைக் கேட்ட வேலப்பன் வாயடைத்துப் போனான். பிறகு சுதாரித்துக் கொண்டு ''தேவதையே! இன்னொரு முறை மூன்று வரங்களைக் கொடு!'' என்று கெஞ்சினான்.

ஆனால் தேவதையோ, ''முடியாது. நான் கொடுத்த வரங்களை நீ உன் அறிவின்மையாலும் பேராசையாலும் வீணடித்துவிட்டாய். அதிர்ஷ்டம் மனிதனுக்கு ஒரு முறைதான் வரும். நீ அதை நழுவ விட்டாய். இனி நீ உன் உழைப்பைத் தான் நம்ப வேண்டும். நீ இனிமேல் காட்டில் மரங்களை வெட்டக் கூடாது. கீழே விழுந்து கிடக்கும் உலர்ந்த கட்டைகளை எடுத்துப் போய் விற்றுப் பிழை. அப்போதுதான் உனக்கும் உன் குடும்பத்திற்கும் போதிய உணவுக்கான பணம் கிடைத்து வரும்,'' என்று கூறி அனுப்பியது.



# சிக்கிம் நாட்டுப்புறக் கதை

*இந்தியாவில் வடகிழக்கு மூலை யிலுள்ள சிக்கிம் மாநிலம் மலைகள் நிறைந்தது. இது இமயமலையின் அடிவாரத்தில் உள்ளது. உலகில் மிக உயரமாகக் கருதப்படும் மலைச் சிகரங்களில் மூன்றாவது இடத்தை வகிக்கும் காஞ்சென்ஜங்கா இதனை அடுத்துள்ளது. இதன் உயரம் 8598 மீட்டர். இம்மாநிலம் 300 மீ. உயரத்தில் இருந்து 8585 மீ. வரை படிப்படியாக உயர்ந்து கொண்டே போகிறது. இதில் மிகச் சிறிய நிலப்பகுதி தான் மனிதர் கள் வசிக்க ஏற்றது.*

*இதன் பரப்பளவு 7096 சதுர கி.மீ. இதன் மக்கள்தொகை 540,493. இதன் வடக்கே திபெத்தும், கிழக்கே பூடானும், மேற்கே நேபாளமும், தெற்கே மேற்கு வங்காளமும் உள்ளன.*

*காஞ்சன்ஜங்காவை இம்மாநிலத் தவர் காங்க் செண்ட்ஜோங்கா என்று கூறுகிறார்கள். இதை தெய்வமாகக் கருதி வழிபட்டு வருகிறார்கள். அதைத் தம் நாட்டைக் காக்கும் கடவுளாகக் கருதுகிறார்கள். டீஸ்டா இம்மாநிலத்தின் முக்கிய நதி.*

*சிக்கிம் இந்தியாவின் மாநிலமாக 1975 ஏப்ரல் 26ல் ஆகியது. இதன் தலைநகர் கங்க்டோக். இதற்குமுன் இதனை ஆண்ட மன்னர்கள் சோக் யால் என அழைக்கப்பட்டனர். ஆங்கிலம் இதன் ஆட்சிமொழி. நேபாளி, ஹிந்தி, சிக்கிமீஸ், லேப்சா ஆகிய மொழிகளும் இங்கு பேசப்படுகின்றன.*

## சூனியக்காரியும் அழகிய பெண்களும்

ஒரு மலையின் அடிவாரத்தில் ஒரு சிறு குடிசையில் கோம்தார்ஹாப், ஜார்க்கார்ஹாப் என்ற இரு அழகிய பெண்கள் வசித்து வந்தார்கள். கோம்தார் தன் இனிமையான குரலில் பாடுகையில் அப்பள்ளத்தாக்கில் மலர்கள் மலர்ந்தன. ஜார்க்கார் நடன மாடினால் காட்டு பயங்கர மிருகங் கள் கூட அவளோடு சேர்ந்து நடனம் புரியுமாம்.

அவர்களது குடிசையைச் சுற்றி இருந்த பூந்தோட்டம் ருமு என்னும் தெய்வத்தினுடையது. அந்தத் தோட் டத்தை சகோதரிகளான அந்த இரு



பெண்கள் கண்ணும்கருத்துமாக கவனித்துக் கொண்டார்கள். அதில் பல அபூர்வ மலர்கள் பூத்தன. அவற்றை யாரும் பாழ்படுத்தாமல் பாதுகாத்து வந்தார்கள். குறிப்பாக லைங்பார் சூனியக்காரி தைன்காப் அங்கு வராமல் இருக்க அவர்கள் எச்சரிக்கையுடன் இருந்தார்கள்.

அந்த சூனியக்காரி ஒருவரைத் தாக்குமுன் அவரது கனவில் தோன்றிப் பயமுறுத்துவாளாம். அவளால் எளிதில் எந்த உருவையும் எடுக்க முடியும். அவளை அடக்க யாராலும் முடியவில்லை.

ஒருநாள் ஜார்க்கார்ஹாப் ஒரு விசித்திரக் கனவைக் கண்டாள். அந்த சூனியக்காரி கோம்தார்ஹாப்பின் தங்கத் தலையணையைப் பிடுங்கிக் கொண்டு ஓடியதாக அந்தக் கனவு இருந்தது. இக்கனவைக் கண்டு ஜார்க்கார் அலறவே அதைக் கேட்டு கோம்தார்ஹாப் தூக்கத்திலிருந்து விழித்து எழுந்து "என்ன விஷயம்?" என்று கேட்கவே, அவளும் தான் கண்ட கனவைக் கூறினாள். அதனால் இருவரும் என்ன செய்வது என்று யோசித்து ஒரு முடிவுக்கு வந்தார்கள்.

அப்போது பூந்தோட்டத்தில் ஓர் இளம்பெண் உலாவிக் கொண்டிருப்பதை அவர்கள் கண்டார்கள். கோம்தார்ஹாப் உடனே அவள் சூனியக்காரியோ என்று சந்தேகப்பட்டாள்.

ஜார்க்கார்ஹாப் தன் தமக்கையின் தங்கத் தலையணையை எடுத்துக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு "அவள் இதைப் பிடுங்கிக் கொண்டு



போகவே வருகிறாள். சந்தேகமே இல்லை," என்றாள்.

அந்த இளம்பெண்ணும் அவர்களருகே வந்து "அடடே! நீங்கள் இருவரும் எவ்வளவு அழகாக இருக்கிறீர்கள்? அதனால் தான் லைங்க்பார் மன்னன் உங்களைப் பார்க்க விரும்புகிறான். உங்களை அவனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன். உம், புறப்படுங்கள்!" என்றாள்.

அப்போது கோம்தார்ஹாப் "எங்களுக்கு ராணியாக ஆக வேண்டும் என்ற ஆசை இல்லை. அதனால் நாங்கள் வரமாட்டோம்," என்றாள். அப்போது அவள் "இது மன்னனின் கட்டளை. நீங்கள் வராவிட்டால் நான் பிடித்து இழுத்துக் கொண்டு போவேன். நான் யார் என்று தெரியவில்லையா? நான்தான் சூனியக்காரி," என்றாள்.



அதைக் கேட்டு சகோதரிகள் இருவரும் பயந்து போனார்கள். கோம்தார்ஹாப் அவளிடம் ''கோபித்துக் கொள்ளாதே! முதலில் நீ ஏதாவது சாப்பிடு. பிறகு பேசலாம்,'' என்று கூறி அவளை உட்கார வைத்துத் தான் சமைத்து வைத்திருந்ததை எல்லாம் எடுத்து வந்து கொடுத்தாள்.

சூனியக்காரியும் அவற்றை 'அபக்' 'அபக்'கென்று விழுங்கி ஏப்பம் விட்டாள். அதன்பின் அவள் அச்சகோதரிகளிடம் ''சரி. இனி கிளம்பலாமே!'' என்றாள்.

அப்போது கோம்தார்ஹாப் ''கொஞ்சம் இரு. வயலைக் கொஞ்சம் உழ வேண்டியுள்ளது. அந்த வேலையைச் செய்துவிட்டு வருகிறேன்,'' என்றாள். அதற்கு சூனியக்காரியோ, ''நீ உழப் போக வேண்டாம். நான் அதை ஒரு நொடியில் செய்துவிடுகிறேன்,'' என்று கூறி ஏதோ மந்திரம் உச்சரித்தாள். மறு விநாடியே வயல் உழப்பட்டு விதை விதைக்கப்பட்டும் விட்டது.

அப்போது சூனியக்காரி ''உம், கிளம்பு!'' எனவே, கோம்தார்ஹாப் ''இரு.இன்னமும் வேலை உள்ளது. நெல் குத்த வேண்டும். துணி நெய்ய வேண்டும்,'' எனவே, சூனியக்காரி அவற்றையும் நொடியில் செய்து விட்டாள். அதன் பிறகு அச்சகோதரிகள் விதியே என்று அந்த சூனியக்காரியோடு சென்றார்கள்.

கொஞ்சநேரத்தில் அவர்கள் ஒரு நதிக்கரையை அடைந்தார்கள். அப்போது ஜாக்கார்ஹாப் ''அதோ அரண்மனை தெரிகிறதே. இனி பயம் இல்லை,'' என்று தன் தமக்கையிடம் கூறினாள்.

அப்போது சூனியக்காரி ''இருவரும் இந்த ஆற்றில் இறங்கிக் குளியுங்கள். பிறகு அரண்மனைக்குப் போகலாம்,'' என்றாள். முதலில் கோம்தார்ஹாப் ஆற்றில் இறங்கினாள். உடனே சூனியக்காரி அவளை ஒரு மீனாக மாற்றி ஆற்றில் தள்ளி விட்டாள். ஜாக்கார்ஹாப் இதைக் கண்டு பயந்து போய் எழுந்து ஓடினாள். ஆனால் சூனியக்காரி அவளைப் பிடித்து நிறுத்தி ''பயப்படாதே! நான் சொல்கிறபடி நடந்தால் உன்னை ஒன்றும் செய்ய மாட்டேன்,''எனக் கூறி அவள் கோம்தார்ஹாப் போல உருமாறினாள். அதுகண்டு ஜார்க்கார்ஹாப் திகைத்துப் போனாள்.

சூனியக்காரியும் ஜார்க்காரும் மன்னனின் அரண்மனைக்குச் சென் றார்கள். சூனியக்காரி மன்னனிடம் தான் கோம்தார்ஹாப் எனக் கூறி, ஜார்க்கார் தன் பணியாள் எனவும் அறிமுகப்படுத்தினாள். மன்னன் கோம்தாராக வந்த சூனியக்காரியின் அழகில் மயங்கி அவளை உடனே மணந்துகொண்டு விட்டான். அவர் கள் சுகபோகத்தில் வாழ, ஜார்க்கார் அவர்களது பணிப்பெண்ணாக இருந்து எல்லா வேலைகளையும் செய்ய வேண்டியதாயிற்று.

ஜார்க்கார் அரண்மனை ஆடுகளை மேய்க்கக் கொண்டு போய்விட்டு மாலையில் கொண்டு வருவாள். அப்போது சூனியக்காரி இரண்டு மூன்று ஆடுகளைப் பிடித்து விழுங்கி வரலானாள். இப்படியே சில நாட் களுக்கு நடந்தது.

ஒருநாள் ஆற்றின் கரையில் உட் கார்ந்து தான் சூனியக்காரியிடம் அகப்பட்டுக் கொண்டு சிரமப்படு வதை வாய்விட்டு புலம்பினாள். அதை ஆற்றிலிருந்து ஒரு மீன் நீர் மட்டத்திற்கு மேல் வந்து கேட்க லாயிற்று. அது தன் சகோதரி கோம் தார்ஹாப் என்று அவள் தெரிந்து கொண்டுவிட்டாள்.

திடீரென அந்த மீன் கோம்தாரா கவே மாறியது. அது தான் நீரில் இருக்கையில் மீனாகவும் கரைக்கு வந்து ஏறிவிட்டால் பழையபடி ஆகிவிடுவதாகவும் கூறினாள். அது முதல் ஜார்க்கார் தினமும் தன் தமக்கையைக் கண்டு ஒரு மணிநேரம் பேசிவிட்டு அரண்மனைக்குச் செல் லலானாள். இதை சூனியக்காரி ஒரு நாள் கண்டுபிடித்துவிட்டாள்.

மறுநாள் சூனியக்காரி தானே ஆடுகளை மேய்க்கவிட ஓட்டிச் சென்றாள். அங்கு நதிக்கரையில் ஜார்க்காருக்காகக் காத்திருக்கும் கோம்தாரை அவள் கண்டாள். சூனியக்காரியைக் கண்டதுமே கோம் தார் ஆற்றில் குதித்துத் தப்பிப் போய் விட்டாள். அதுகண்டு சூனியக்காரி வாட்டமடைந்து அரண்மனைக்குத் திரும்பி வந்தாள்.

ஜார்க்காரோ தன் சகோதரிக்கு

## பௌத்த விஹாரங்கள்

சிக்கிமில் பௌத்த விஹாரங்கள் ஏராளமாக உள்ளன. இதனை 'கோம்பா' என்கிறார்கள். இவை நியின்ங்மாபா, கார்க்யுபா பிரிவு களின் மேற்பார்வையில் உள்ளன. 1705ல் கட்டப்பட்ட மூன்று அடுக்கு பென்மயாங்ட்ஸே விஹாரம் சிற்பங்களும் ஓவியங்களும் நிறைந்தது. பழமையானது. இதில் குரு ரிம்போசேயின் சங்கத்தோக்பல்ரி எனப்படும் மர வேலைப் பாடுள்ள வாசஸ்தலம் சித்தரிக்கப்பட்டுள்ளது. இதனை ஐந்து ஆண்டுகளில் டுங்ஜின்ரிம்போசே என்ற பிக்ஷு மரத்தில் கடைந்து உருவாக்கினாராம்.



சூனியக்காரியால் என்ன ஆபத்து நேர்ந்திருக்குமோ என்று எண்ணிக் கவலைப்படலானாள். கடவுளை வேண்டிக் கண்ணீர் உகுத்தாள்.

மத்தியானம் வந்தபோது மன்னன் தன் மனைவியைக் காண வந்தான். அங்கு ஜார்க்கார் கண்ணீர் உகுத்துக் கொண்டிருப்பதைக் கண்டு ''ஏன் அழுகிறாய்? என்ன விஷயம்?'' என்று கேட்டான்.

அப்போது தன் கதையைக் கூறி சூனியக்காரியின் வஞ்சகத்தை விவரமாக விளக்கினாள். அவன் ஆச்சரியத்துடன் ''இதெல்லாம் உண்மையா?'' என்று கேட்டான். அப்போது ஜார்க்கார் ''இன்று மாலை ஆடுகளை அடைக்கும் கொட்டிலில் மறைந்திருந்து பாருங்கள். அப்போது நீங்கள் அவள் ஆடுகளைப் பிடித்து விழுங்குவதைக் காண்பீர்கள்!'' என்றாள்.

மன்னனும் அன்று மாலை ஆடுகளை அடைக்கும் கொட்டிலில் மறைந்திருந்தான். நள்ளிரவில் தன் மனைவி வருவதைக் கண்டு மன்னன் ஆச்சரியப்பட்டான். அவள் சூனியக்காரியாக உருமாறி மூன்று ஆடுகளைப் பிடித்து அப்படியே முழுதாக விழுங்குவதை அவன் கண்டான். திகைத்துப் போன அவன் அரண்மனைக்குள் சென்றுவிட்டான்.

மறுநாள் மன்னன் அரண்மனைக்குப் பக்கத்தில் ஓர் அறையைப் புதிதாகக் கட்டும்படிக் கட்டளை இட்டான். அதை நன்கு அலங்கரித்து படுக்கும் இடத்தின் கீழ் ஒரு பள்ளத்தைத் தோண்டி வைக்கச் சொன்னான். அதற்குள் கூரான ஆயுதங்களை நட்டு வைக்கச் சொன்னான்.

இவ்வாறு செய்தபின் தன் ராணியாகிய சூனியக்காரியிடம் ''நான் கட்டியுள்ள ஓர் அறையை வந்து பார்!'' எனக் கூறி அவளை அழைத்துக் கொண்டு அங்கு சென்றான். அங்கு விரித்திருந்த படுக்கையைக் கண்டு அவள் அதில் உட்கார்ந்தாள். மறுவிநாடியே அவள் பள்ளத்தில் விழுந்து கூரான ஆயுதங்களில் மாட்டிக் கொள்ளவே, அவள் துடிதுடித்து இறந்து போனாள்.

மன்னன் ஜார்க்காரைக் கூட்டிக் கொண்டு நதிக்கரைக்குச் சென்றான். அங்கு கோம்தார் ஜார்க்காருக்காகக் காத்திருப்பதைக் கண்டான். சூனியக்காரி இறந்ததும் அவளது மந்திர சக்தியும் அவளோடு போய்விட்டது. மன்னன் உண்மையான கோம்தாரை மணந்து கொண்டான். அதன்பின் இரு சகோதரிகளும் அரண்மனையில் சுகமாக இருந்தார்கள்.



# செய்திச் சுடர்



## இந்தியருக்கு புலிட்ஸர் பரிசு

கீதா ஆனந்த் என்பவர் தேசிய நீச்சல் மாவீராங்கனையாகத் திகழ்ந்தவர். அவர் மும்பையில் கதீட்ரல் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது பள்ளியின் தலைமை மாணவியாக இருந்ததோடு பள்ளியின் செய்தித்தாளில் போட்டிகளையும் உள்ளூர்ச் செய்திகளையும் தொகுத்துப் பிரசுரித்து வந்தார். இதனால் பத்திரிகைத் துறையில் இவரது ஆர்வம் அதிகரித்தது. இவர் அமெரிக்காவில் அண்மையில் செய்யப்பட்ட பல பணமோசடி ஊழல்களை நியூயார்க்கிலிருந்து வெளிவரும் 'தி வால் ஸ்ட்ரீட் ஜர்னலில்' தொடர் கட்டுரைகளை பிரசுரித்தார். இக்கட்டுரைகளே இவருக்கு புலிட்ஸர் பரிசை கிடைக்கச் செய்தன. ஏப்ரலில் இவருக்கு மிகவும் மதிக்கப்படும் இப்பரிசு வழங்கப்படுவதாக அறிவிக்கப்பட்டது. இப்பரிசைப் பெற கதீட்ரல் பள்ளி முதல்வர் தனக்குப் பத்திரிகைத் துறையில் இருந்த ஆர்வத்தைத் தாம் பள்ளியில் படிக்கும்போதே ஊக்குவித்ததுதான் காரணம் என்று கூறுகிறார்.

## முதலாவது புத்தகமே அள்ளிக் கொடுத்தது

ஷீலா க்விக்லிக்கு இனி அரசாங்க உதவி தேவைப்படாது. ஏனெனில் இவர் தமது முதல் நாவலை எழுதிப் பிரசுரித்ததில் திடீரெனக் கோடீஸ்வரி ஆகிவிட்டார். முப்பது வருடங்களுக்குமுன் இவரது கணவர் இறந்துவிடவே இவருக்குப் போதிய வருமானம் இல்லாது போயிற்று. அரசாங்கம் அவர் வாழ்ந்துவர சுந்தர்லாண்டிஸில் ஒரு வீட்டைக் கொடுத்தது. ஆனால் மூன்று வருடங்களுக்குமுன் அது இடிக்கப்பட்டுவிட்டது. வேறு ஒரு வீடு அளிக்கும்படி அரசாங்கத்திடம் முறையிட்டு அங்கும்இங்குமாக அலைந்து பார்த்தார். அப்போதுதான் இவர் 'வீட்டிற்காக ஓயாத அலைச்சல்' என்ற நாவலை எழுதத் தொடங்கினார். பிரசுர நிறுவனங்கள் புதிய எழுத்தாளர்களுக்கு ஊக்கம் அளிக்க முடியாது என்ற கூற்றை இவர் தகர்த்துவிட்டார். நான்கு பிரபல பதிப்பகங்கள் இவரது நாவலுக்கு 250,000 பவுன்கள் கொடுப்பதாகக் கூறின. ஆனால் ராண்டம் ஹவுஸ் என்ற பதிப்பகம் இத்தொகையைப் போல இரு மடங்கு தொகை கொடுத்து அதைப் பிரசுரிக்கும் உரிமைகளைப் பெற்றுவிட்டது. ஷீலா முன்னுக்கு வந்துவிட்ட எழுத்தாளர் என்று அப்பதிப்பகம் கூறுகிறது.





# வெற்றியில் தோல்வி

துர்க்காதாசர் தாம் நடத்தி வந்த குரு குலத்தில் மற்ற விஷயங்களைவிட போர்க்கலைக்கே அதிக முக்கியத் துவம் கொடுத்து வந்தார். வாள் சுழற்றல், ஈட்டி எறிதல், கதாயுதப் போர், மல்யுத்தம் ஆகிய வற்றில் அவரது மாணவர்கள் நல்ல பயிற்சி யைப் பெற்றார்கள். அவர்களில் குறிப்பாக அரசகுமாரன் அமரசிம் மனும், சஞ்சயனும் மற்போரில் சிறந்து விளங்கினார்கள்.

சஞ்சயன் சாதாரண குடும்பத்தில் பிறந்தவனே. ஆனாலும் ஒருமுறை நடந்த மல்யுத்தத்தில் அரசகுமாரனை தோற்கடித்தான். இதனால் அமர சிம்மனுக்கு சஞ்ஜயன் மீது வெறுப் பும் பொறாமையும் ஏற்பட்டது.

குருகுலத்தில் அவர்களது படிப்பு முடிந்தது. அப்போது அமரசிம்ம னும் சஞ்ஜயனும் தம் குருவை வணங்கி தாம் என்ன குருதட்சிணை கொடுக்க வேண்டுமென்று கேட் டார்கள். துர்க்காதாசரும் தம் குரு தட்சிணையைத் தமக்குத் தேவைப் படும்போது அவர்களிடம் கேட்டு வாங்கிக் கொள்வதாகக் கூறி அவர் களை அனுப்பினார்.

ஐந்து வருடங்கள் கழிந்தன. அமர சிம்மனின் தந்தை இறக்கவே, அமர புரிக்கு அமரசிம்மன் ஜமீன்தாரரா னான். அப்போதும் கூட மல்யுத்தத் தின் மீதுள்ள ஆர்வம் குறைய வில்லை. அவன் தன் நாட்டிலுள்ள மல்யுத்த வீரர்களைக் கூட்டி போட்டி களை வைத்தான்.

அவற்றில் யாவரையும் வென்று முதலாவதாக வந்தவனுடன் அவனே மல்யுத்தம் புரிவதாகக் கூறி ''என் னோடு மல்யுத்தம் செய்து யாராவது வெற்றி பெற்றால் அவருக்கு நிறை யப் பரிசுகளை அளிப்பேன். அவர் என்னிடம் தோற்றுவிட்டாலும் அவர்

- கி. அருணா -

மீண்டும் மல்யுத்தமே செய்யக் கூடாது என்ற வாக்குறுதி பெற்று அவருக்கு எஞ்சிய வாழ்நாள் முழு வதும் சுகமாக வாழ பணமும், மற்ற வசதிகளும் செய்து கொடுப்பேன்,'' என அறிவித்தான்.

இதனால் போட்டிக்கு வந்தவர்கள் எல்லோருமே ஜமீன்தாரரை மல்யுத் தத்தில் வென்று ஒருமுறை மட்டும் பரிசுளைப் பெறுவதைவிட அவ ரிடம் தோற்று ஆயுள்காலம் முழு வதும் பணமும் வசதிகளும் பெறு வதே லாபகரமானது என்று எண்ணி அவரிடம் வேண்டுமென்றே தோற்று வந்தார்கள்.

இந்த மாதிரி நடந்து வருவது துர்க்காதாசருக்குத் தெரிய வந்தது. அவர் சஞ்சயனை குருகுலத்திற்கு வர வழைத்து "அமரசிம்மன் மல்யுத்தப் போட்டிகளை நடத்தி வருகிறானே. நீ ஏன் அவற்றில் கலந்து கொள்ளாமல் இருக்கிறாய்?'' என்று கேட்டார்.

சஞ்சயனும் "குருவே! அமரசிம் மன் தானே சிறந்த மல்யுத்த வீரன் என்று எண்ணிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறான். குருகுலவாசத் தின்போது நான் அவனை மல்யுத்தத் தில் தோற்கடித்ததை அவன் மறந் திருக்க மாட்டான் என்றே நினைக் கிறேன். சிறந்த மல்யுத்த வீரர் களுக்குப் பணத்தாசை காட்டி அவன் அவர்களை வென்றுவிட்டதாக எண் ணிப் பெருமிதம் கொள்கிறான். என்னால் அமரசிம்மனைத் தோற் கடித்துவிட முடியும். அவனை நான் போட்டியில் தோற்கடித்துவிட்டால்



கோபமும் ஆத்திரமும் கொண்டு என்ன செய்வான் என்று சொல்ல முடி யாது,'' என்று பணிவுடன் கூறினான்.

சஞ்சயன் கூறியதைக் கேட்டு துர்க்காதாசர் கண்ணை மூடி சற்று நேரம் யோசித்தார். சஞ்சயனின் திறமை இதுவரை மக்களுக்குத் தெரியாமலேயே இருந்து வருகிறதே என்று எண்ணி அவர் மனம் மிகவும் வருத்தப்பட்டது. அமரசிம்மனின் அடாத செயலால் ஓர் உண்மையான வீரனை உலகம் தெரிந்து கொள் ளாமல் இருக்கிறதே என்று எண்ணி அவர் வேதனைப்பட்டார். எனவே இந்தப் பிரச்சினையைத் தீர்க்க அவர் தம் குருதட்சிணை என்பதைப் பயன்படுத்தத் தீர்மானித்தார்.

அவர் சஞ்சயனைக் கூட்டிக் கொண்டு அமரபுரிக்குச் சென்றார். அங்கு ஒரு விடுதியில் அவனைத்



தங்க வைத்துவிட்டு துர்க்காதாசர் தாம் மட்டும் சென்று அமரசிம்மனைக் கண்டார். அமரசிம்மனும் அவரை அன்புடன் வரவேற்று எல்லா மரியாதைகளையும் செய்தான்.

அவனது நலன் விசாரித்துவிட்டு துர்க்காதாசர் ''என்னிடம் போர்க் கலை பயின்றவர்களில் நீயும் சஞ்சயனும் தான் சிறந்து விளங்கினீர்கள். எனக்கோ வயதாகிவிட்டது. ஒரு முறையாவது தலைசிறந்த என் இரு சீடர்கள் போட்டி போடுவதைக் காண வேண்டும் என்று நான் மிகவும் ஆசைப்படுகிறேன். நீ ஜமீன்தாரர் என்ற நினைப்பை விட்டுவிட்டு என் சீடனாக இருந்து என்னுடைய மற்ற சீடனான சஞ்சயனுடன் மல்யுத்தத்தில் போட்டி போட வேண்டும். அதில் நீ அவனைத் தோற்கடித்துவிட வேண்டும். ஒருவேளை நீ அவனைத் தோற்கடிக்க முடியாது போனால் அவனை வெறுத்துப் பழிவாங்கக் கூடாது. இதுதான் நான் உன்னிடம் கேட்கும் குருதட்சிணை,'' என்றார். அமரசிம்மனும் இதனை மகிழ்ச்சியுடன் ஏற்றான்.

அதன்பின் துர்க்காதாசர் சஞ்சயனைத் தங்கவைத்து விட்டுவந்த விடுதிக்குச் சென்றார். அவர் அவனிடம் தான் அமரசிம்மனிடம் கூறியதைச் சொல்லி ''சஞ்சயா! நீ அமரசிம்மனோடு மல்யுத்தம் புரியும் இப்போட்டியில் கண்டிப்பாக நீ வெற்றி பெற்றே தீர வேண்டும். இதுதான் நீ எனக்குக் கொடுக்கும் குருதட்சிணை. ஆனால் நீ அடையும் வெற்றியை போட்டியைக் காண வந்தவர்கள் தோல்வி எனக் கூறும்படிச் செய்ய வேண்டும். அவ்வாறு செய்ய முடியாது என மட்டும் கூறாதே! உன் கூரிய அறிவைப் பயன்படுத்தினால் அது உன்னால் முடியும்,'' என்றார்.

மறுநாள் அமரசிம்மனுக்கும் சஞ் சயனுக்கும் போட்டி நடந்தது. குரு சொன்னதை நினைவில் வைத்துக் கொண்டு அமரசிம்மனின் தாக்குதல் களை எல்லாம் எதிர்த்து முடிவில் அமரசிம்மனைத் தோற்கடித்தான். அந்தப் போட்டியைக் காண வந்தவர் கள் யாவரும் அப்படிப்பட்ட முடி வைக் கண்டு கல்லாய்ச் சமைந்து போனார்கள்.

அப்போது சஞ்சயன் அவர்களைப் பார்த்து இரு கைகளையும் கூப்பி வணங்கி ''ஜமீன்தாரர் மல்யுத்தம் செய்வதில் மிக்க திறமை கொண் டவர். நான் இவரிடம் தோற்றுப் போக வேண்டும் என்று மிகவும் முயற்சி செய்தேன். அவரோ என் போன்ற வீரன் பணத்திற்கும் சுக வசதிகளுக்கும் ஆசைப்பட்டு தோற் றுப் போய்விடக் கூடாது என்று எண் ணியே அவர் தோற்றுப் போனார். இப்போட்டியில் உண்மையான வெற்றி பெற்றவர் நம் ஜமீன்தாரரே!'' என்று கூறினான்.

அதைக் கேட்டு அங்கிருந்தவர்கள் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய் தார்கள். துர்க்காதாசரும் அமரசிம்மன் முதுகில் பரிவுடன் தட்டினார். அப் போது அமரசிம்மன் பெருமூச்சு விட்டவாறே ''சஞ்சயன் மல்யுத்தம் புரிவதில் திறமை மிக்கவன் என்பது எனக்குத் தெரியும். இவனிடம் நான் தோல்வி அடைவது இரண்டாம் தடவையாகும். போர் புரியத் திறமை வேண்டும். பதவி, கர்வம் என்பதெல் லாம் இருந்தால் வெற்றி கிடைக்காது. இவ்வளவு நாட்களாக நான் பதவி யில் இருப்பதால் கர்வம் கொண்டு பல திறமைசாலிகளுக்குப் பணத் தாசை காட்டி அவர்களது திறமையை மற்றவர் அறயாமல் செய்துவிட் டேன். இன்று என்னுடன் படித்த சஞ்சயன் என் கண்களைத் திறந்து விட்டான். எனது கர்வம் இப்போது ஒழிந்து போயிற்று. தவறைச் சுட்டிக் காட்டிய என் நண்பன் சஞ்சயனுக்கு மிக்க நன்றி,'' என்றார்.

அப்போது துர்க்காதாசர் இருவருக் கும் ஆசிகள் கூறி ''நீங்கள் இருவரும் நான் கேட்ட குருதட்சிணையைக் கொடுத்துவிட்டீர்கள். இதுவே எனக்கு போதும்,'' என்றார்.



# நம் இந்தியா

1. ஜவாஹர்லால் நேரு மூன்று புத்தகங்களை எழுதினார். அவற்றின் பெயர்களையும், பிரசுரமான வருடங்களையும் தாறுமாறாகக் கொடுத்திருக்கிறோம். அவற்றை சரிப்படுத்துங்கள்.

   அ) சுயசரிதை — i) 1934
   ஆ) டிஸ்கவரி ஆஃப் இந்தியா — ii) 1936
   இ) கிளிம்ஸஸ் ஆஃப் வேர்ல்ட் ஹிஸ்டரி — ii) 1946

2. பண்டித மோதிலால் நேருவின் தொழில் என்ன?
   அ) பேராசிரியர்
   ஆ) வழக்கறிஞர்
   இ) டாக்டர்

3. இந்தப் படத்தில் ஜவாஹர்லால் நேருவுடன் இருப்பவர் யார்?



4. ஜவாஹர்லால் நேருவின் சகோதரி விஜயலட்சுமி பண்டிட் எந்த நாட்டின் தூதுவராக இருந்தார்?
   அ) சீனா
   ஆ) சோவியத் ரஷ்யா
   இ) அமெரிக்கா

5. இந்திரா காந்தி பிரதம மந்திரியான போது அவரது வயது என்ன?
   அ) 49 ஆ) 53 இ) 57

6. இந்திரா காந்தி பிரதம மந்திரியாகு முன் மத்திய அரசின் ஓர் அமைச்சராக இருந்தார். அவருக்கு அளிக்கப்பட்ட இலாகா எது?
   அ) செய்தி ஒலிபரப்பு
   ஆ) கல்வி இ) சுகாதாரம்

7. இந்திரா காந்தி கொண்டு வந்த சட்டங்களில் ஒன்று மிக முக்கியமானதாகக் குறிப்பிடப்படுவது எது?
   அ) நீர் வழிகளை தேசியமயமாக்கல்
   ஆ) எஃகு ஆலைகளை தேசியமயமாக்கல்
   இ) வங்கிகளை தேசிய மயமாக்குதல்

8. இந்திரா காந்தி இரண்டாவது முறையாகப் பிரதம மந்திரியானது எந்த ஆண்டில்?
   அ) 1971 ஆ) 1975 இ) 1980

*(விடைகள் அடுத்த மாதம்)*

## ஆகஸ்ட் மாத வினாக்களின் விடைகள்

1. அ - iii
2. ஸ்ரீராமர்
3. பாலகங்காதர திலக், விநாயக சதுர்த்தி
4. படத்தில் தீபாவளிக் காட்சிகளும் ஹோலி காட்சிகளும் சேர்ந்து உள்ளன. இந்த இரு பண்டிகைகளும் வெவ்வேறு மாதங்களில் கொண்டாடப்படுபவை.



# விநாயகர்

ஹோமத் தீயிலிருந்து வெளிவந்த பயங்கர உருவம் மறைந்த உடனே காலன் ராட்சஸ உருவை எடுத்து பாசக் கயிறை விட்டெறிந்தான். அது கிர்கிர்ரென்று சுழன்று மாபெரும் பிரளயமே ஏற்பட்டது போன்ற நிலையை உருவாக்கியது.

அபிநந்தன் அதனைப் பிடித்து அறுத்துவிட முயன்று தோல்வியுற்றான். கால பாசம் மேலும் தீவிரமாகி ஜீவராசிகளை நாசமாக்கவே, வசிஷ்டர் முதலிய ஏழு முனிவர்களும் பல ரிஷிகளும் ஒன்றுகூடி விநாயகரை வேண்டினார்கள்.

விநாயகரும் சுவஸ்திகா பீடத்தில் அமர்ந்து அவர்களின் முன் தோன்றினார். தன் கையிலிருந்த பாசத்தை விடவே, அது காலனைப் பிடித்து இழுத்துக் கொண்டுவந்து அவர்முன் போட்டது. காலனோ தோல்வி அடைந்ததால் மேலும் ஆத்திரப் பட்டு பயங்கர உருவில் தன் கதையை எடுத்து வீசினான். விநாயகர் தம் அங்குசத்தை எடுத்து எறியவே அது காலனின் கதையைத் தகர்த்து அவனது உடலில் பாய்ந்தது. அதனால் அவன் துடிதுடித்து அங்கும்இங்கும் ஓடி முடிவில் விநாயகரின் கால்களில் வீழ்ந்தான். அவர் அவனை தம் இரு கால்களால் பலமாக அமுக்கினார்.

விநாயகரும், ''காலா! பிறர் செய்ய வேண்டிய வேலைகளை எல்லாம் தானே செய்துவிட முடியும் என எண்ணிச் செயல்படுவது என்றுமே ஆபத்தானது. உன் கடமையை நீ சரிவரச் செய்து வா. அது போதும்,'' என்றார்.

காலனும் தன் இரு காதுகளையும்



பிடித்துக் கொண்டு மூன்று தோப்புக் கரணங்கள் போட்டு ''எனக்கு புத்தி வந்தது பிள்ளையாரே! அந்த இந்திரனின் பேச்சைக் கேட்டு மதி மயங்கிப் போனேன். இனி உங்களை நம்பி இருப்பவர்களிடம் என் சக்தியைக் காட்ட மாட்டேன்,'' எனக் கூறி விடைபெற்றுக் கொண்டு சென்றான்.

அதுமுதல் யாரும் எந்தவொரு நல்ல வேலையை ஆரம்பிக்கும் போது கோலம் போடும் இடத்தில் சுவஸ்திகா சின்னத்தை பொறிக்கலானார்கள். விநாயகரை மஞ்சளில் உருவாக்கி மங்களகரமாய் எல்லாம் முடிய வேண்டும் எனப் பிரார்த்தனை செய்யலானார்கள்.

''காலனையே தன் காலடியில விழச் செய்து விநாயகர் தம் கால்களின் கீழே சின்னமாக இருக்குமாறு செய்தார். இப்படிப்பட்டவரை நம்பி வழிபட்டு அவரது நல்லாசிகளைப் பெறுபவர்கள் காலத்தையே கூட வென்று வெற்றி பெறுவார்கள்,'' எனப் பாவனமிசிரர் கூறிக் கதையை முடித்தார்.

ஒருநாள் ஒரு சிறுமி பாவனமிசிரரின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு அவரை ஓர் ஓவியத்தின் முன் கொண்டுபோய் நிறுத்தினாள். அப்படத்தில் ஓர் அழகான பெண் விநாயகரின் சிலை முன் அமர்ந்து வேண்டிக் கொண்டிருப்பதுபோல வரையப்பட்டிருந்தது. ஆனால் இளமைத் தோற்றத்தில் உள்ள அவளது தலையின் கேசம் மட்டும் வெள்ளைவெளேரென இருந்தது. அதைக் காட்டி அச்சிறுமி ''இது மட்டும் இப்படி இருக்க என்ன காரணம்?'' என்று கேட்டாள். அதற்கு பாவனமிசிரர் அதற்கான கதையைக் கூறலானார்.

ஒருமுறை ஒரு தம்பதிகள் விநாயகரை வேண்டிக் கொண்டதன் பேரில் அழகான பெண் குழந்தையை மகளாக அடைந்தார்கள். அவர்களுக்குப் பிறந்த அக்குழந்தை பிறக்கும்பொழுதே தன் கண்களை அகல விரித்து பிரசவ அறையில் வைக்கப்பட்டிருந்த விநாயகரின் பதுமையைப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தது.

அந்தப் பெண் குழந்தைக்கு சுந்தரி என்று பெயர் வைத்தார்கள். அவளும் வளர்ந்து பெரியவளாகி மிகவும் அழகானவளாய் விவாக வயதை அடைந்துவிட்டாள். அவள் அழகுடன் நல்ல அறிவும் பெற்றிருந்தாள்.

சுந்தரியின் அழகு பற்றி எல்லா ஊர்களிலும் பேசிக் கொண்டனர். அவளை மணக்க பல கோடீஸ்வரன் களின் புதல்வர்களும், அதிகாரத்தில் உள்ளவர்களும் விரும்பி அவளது தாய், தந்தையருக்கு ஆட்களை அனுப்பினார்கள்.

அந்நாட்டு மன்னனே அவளது அழகைக் கேள்விப்பட்டு அவளைத் தன் பட்டத்து ராணியாக ஆக்கிக் கொள்ள விரும்பினான். அவன் தன் வீரர்கள் புடைசூழக் கிளம்பி சுந்தரி யின் ஊருக்கு வந்து கொண்டிருந் தான். இந்தச் செய்தியும் அவ்வூராருக் குத் தெரிந்தது.

சுந்தரி தினமும் தன் ஊரிலுள்ள ஆற்றங்கரைப் பிள்ளையாரை வணங்கி ஆராதித்து வந்தாள். அந் நாட்டு மன்னன் வரும் செய்தி கேட்ட அவள் தன் இஷ்ட தெய்வமான விநாயகர் முன் அமர்ந்து வணங்கி ''விநாயகா! குழந்தைப் பருவத்தில் இருந்தே நான் உம்மை வணங்கி வழிபட்டு வருகிறேன். சம்சார சாக ரத்தில் வாழ்க்கை நடத்த விரும்ப வில்லை. என்னை ஒரு கிழவியாக ஆக்கிவிடு. நல்ல அறிவு எனக்கு இருக்கட்டும். நான் பிறந்த தற்குப் பிறருக்கு உதவும் நற்பயன் கிட் டட்டும்,'' என வேண்டினாள்.

மறுநிமிடமே அவளது கருத்து அடர்ந்து வளர்ந்திருந்த கூந்தல் வெள்ளைவெளேரென்று ஆகி வெள்ளி இழைகள்போல மின்னின. மாம்பழக் கதுப்புகள் போல இருந்த கன்னங்கள் வற்றிச் சுருங்கி அதுக்கல்



விழுந்தது போலாயின. நெற்றியில் பல சுருக்கங்கள் விழுந்தன.

அப்போது ஆற்றில் குளிக்க வந்த வர்கள் எல்லோரும் சுந்தரி அவ்வாறு மாறிப் போனது கண்டு திகைத்துப் போனார்கள். தன் மகளை அந்தக் கோலத்தில் கண்டு சுந்தரியின் பெற் றோர்கள் ''ஐயோ! என்னம்மா இது? திடீரென உன் உருவில் ஏன் இப்படி மாற்றம் ஏற்பட்டது?'' என்று கேட்டார்கள்.

அவளும் ''கவலைப்படாதீர்கள். இனி நான் இளம்பெண் அல்ல. அழகியும் அல்ல. முதுமை அடைந் தவள். கிழவி. ஆனால் நீங்கள் கொடுத்த பிறப்பைப் பயனுள்ளதாக ஆக்கிக் கொள்ள விநாயகர் அளித்த வரப்பிரசாதம் இது,'' எனக் கூறி அவர்களை வணங்கினாள்.

அவள் அருகில் இருந்த ஒரு மரக் கிளையை ஒடித்து ஊன்றுகோல்



போல வைத்து நிமிர்ந்து எழுந்து நிற்கையில் அந்த நாட்டு மன்னனும் அங்கு வந்து சேர்ந்தான். அவனைப் பார்த்து அவள் ''மன்னா! இளம் பெண்களைக் காக்க வேண்டிய பொறுப்பு உன்னுடையதாக இருக்கையில் அவர்களில் ஒருத்தியை மணந்து கொள்வதா? இது என்ன நியாயம்?'' எனக் கேட்டாள். வெட்கத்தால் தலைகுனிந்த மன்னன் தலைமீதிருந்த கிரீடத்தையும் இடைவாளையும் கீழே வைத்து கிழவியாக மாறிய சுந்தரியின் கால்களில் விழுந்து வணங்கி ''மாபெரும் அறிஞர் திலகமே! உங்கள் தரிசனத்தால் என் அறியாமையே அகன்றது. இனி நானும் அரசன் என்ற அகந்தையை விட்டு மக்களின் ஊழியனாக பணி புரிவேன்,'' என்று கூறினான்.

மூதாட்டி ஊன்றுகோலை ஊன்றியவாறே தன் வழியில் சென்றாள். அறிவுக்கு உறைவிடமாகக் கருதப்படும் ஒரு மடத்தை அடைந்து அதன் தலைவரிடம் அவள் தனக்கு ஞானோபதேசம் செய்யும்படி வேண்டினாள். அவரோ, ''அம்மணி, நீங்களோ பெண் இனம். நீங்கள் உபதேசம் பெற்று என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று கேட்டார்.

அப்போது மூதாட்டி ''நீரும் நெருப்பும் ஆண்களுக்குத்தான் பயன்படுகின்றனவா? பெண்களுக்கும் இல்லையா? அவர்களும் அவற்றைப் பயன்படுத்துவது இல்லையா? குருடன் கையில் விளக்கு இருந்தாலும் அது மற்றவர்களுக்கு வெளிச்சம் அளித்து வழி காட்டும் அல்லவா? இவை எல்லாம் ஆண் பெண் ஆகிய இருபாலருக்கும் சொந்தமே. இதில் ஆண் பெண் என்ற பாகுபாடு எதற்கு?'' என்று கேட்டாள். அப்போது அந்த ஞானபீட அதிபதி ''ஆ! மாபெரும் மேதையே. இந்த ஆசனத்தை அலங்கரிக்க வேண்டியது தாங்களே. நான் அல்ல,'' என்று தழுதழுத்த குரலில் கூறி நின்றார்.

மூதாட்டியும் ''பீடம், மடம் என்று தனிப்படுத்துவானேன்? மக்களை அணுகி அவர்களருகே இருந்து அறிவுரை கூறுவதே சிறந்தது,'' என்றாள்.

அந்த ஞான பீடத்தின் அதிபதி மூதாட்டியின் கால்களில் விழுந்து ''அம்மணி, நானும் இனி தாங்கள் கடைப்பிடிக்கும் வழியையே பின்பற்றுகிறேன்,'' எனக் கூறினார்.

ஒருமுறை அந்த மூதாட்டி ஒரு கிணற்றங்கரை அருகே சென்றபோது

அங்கு தண்ணீர் எடுக்க வந்த பெண்கள் பேசிக் கொண்டது அவளது காதில் விழுந்தது. ஒருத்தி மட்டும் ''யார் முன்னால் வந்திருந்தாலும் கவலை இல்லை. நான்தான் முதலில் தண்ணீர் இழுத்துக் கொள்வேன். பிறகு தான் மற்றவர்களுக்கு'' என்று கூறி ஒவ்வொருவருக்கும் முறை போட்டாள்.

அப்போது சற்று தூரத்தில் நின்ற ஒரு சிறுமி ''அம்மா! தாகமாக இருக்கிறது. கொஞ்சம் குடிக்கத் தண்ணீர் ஊற்றுங்கள்,'' என்று கெஞ்சினாள். ஆனால் அந்த பெண்களோ ''போ, போ. விலகிப் போ, வராதே! நீங்கள் எல்லாம் இந்த கிணற்றின் பக்கமே வரக் கூடாது,'' என்று கூறினார்கள். சிறுமியோ வெகுதூரம் நடந்து வந்து களைத்துப் போனதால் மயக்கம் போட்டுக் கீழே விழுந்து விட்டாள்.

அப்போது மூதாட்டி அச்சிறுமியின் அருகில் போய் தன் செம்பிலிருந்த நீரை எடுத்து அவள் வாயில் விட்டுக் குடிக்கச் செய்தாள். மீதமுள்ள நீரை அந்த மூதாட்டி குடித்தாள். அதைக் கண்டு கிணற்றங்கரையில் இருந்த பெண்கள் ''பாட்டி! இதென்ன? அந்தப் பெண் தீண்டத்தகாதவள். அவளைப் போய்த் தொட்டுக் குடிக்கத் தண்ணீர் ஊற்றினாயே!'' என்று கூறினார்கள்.



அந்த மூதாட்டியோ, ''பெண்களே! உலகில் ஜாதி என்பது ஏது? இப்பெண்ணின் உடலில் ஓடும் ரத்தம் போலத்தான் என் உடலிலும் ஓடுகிறது. உங்கள் உடல்களில் வேறு ஏதாவது உயர்ந்த பாலோ ஓடுகிறதா? அப்படி ஓடினால் உங்களுக்கு நீர் எதற்கு? இது குடிக்கும் நீர். எங்களைப் போன்றவர்களைக் குடிக்க விடுங்கள். உங்கள் உடலில் பால் ஓடுவதானால் அதோடு திருப்தி அடையுங்கள்,'' என்றாள்.

அதுகேட்டு அந்த பெண்கள் வாயடைத்துப் போனார்கள். மூதாட்டி கூறிய அறிவுரை அவர்களுக்குப் புரிந்தது. அவர்கள் மூதாட்டியைப் பணிவுடன் வணங்கி வழி அனுப்பி வைத்தார்கள்.

ஓர் ஊரில் அந்த மூதாட்டி ஒரு கோயிலில் மிருகங்களைப் பலியிடப் போவதைக் கண்டாள். அந்த பலி அம்மனின் கோபத்தைத் தணிக்கத் தான் என்று வேறு அவர்கள் கூறினார்கள். அதைக் கேட்ட மூதாட்டி ''கடவுள் படைத்த உயிரினங்களைக் கொன்று அவற்றின் மாமிசத்தை உண்டு உங்கள் உடல்களை வளர்ப்பதா? தன் குழந்தைகளையே கொல்வதையா அம்மன் விரும்பு கிறாள்? இல்லை. இல்லவே இல்லை,'' என்றாள்.

அங்கு கூடி இருந்தவர்கள் ''ஐயோ! இப்படிப் பேசுவது அம்மனுக்குச் செய்யும் அபசாரம். அம்மனுக்குக் கோபம் வந்தால் எல்லாவற்றையும் சுட்டு எரித்துச் சாம்பலாக்கிவிடுவாள். தெரியுமா?'' என்றார்கள்.

அப்போது மூதாட்டி, ''ஆ! அம்மனின் கோபத்தைத் தணிக்க இந்த மிருக பலியை லஞ்சம் கொடுப்பது போலக் கொடுக்கிறீர்களா? இப்படி பயப்பட்டா பக்தியைக் காட்டுவது? நீங்கள் நினைப்பதையெல்லாம் அம்மன் விரும்புவதாக ஏன் சொல்லித் திரிகிறீர்கள்? உண்மையிலேயே அம்மன் மீது நீங்கள் பக்தி கொண்டிருந்தால் உங்கள் மனதில் பயமும் இராது. உங்களுக்கு எந்தத் தீங்கும் நேராது,'' எனக் கூறி அவர்கள் புரிந்து கொள்ளும்விதமாய் பக்தி மார்க்கத்தை உபதேசித்தாள்.







# இரு தேவதைகள்

சிறுவயதிலேயே தாய், தந்தையை இழந்துவிட்ட கேசவனை அவனது பாட்டிதான் வளர்த்துப் பெரியவனாக்கினாள். சில ஆண்டுகளானதும் அந்தப் பாட்டியும் நோய்வாய்ப்பட்டு படுத்தபடுக்கையாகக் கிடந்தாள். இனி தான் பிழைக்கப் போவதில்லை எனத் தெரிந்து கொண்ட அவள் தன் பேரனை அருகே அழைத்து இரு பொம்மைகளைக் கொடுத்து ''இவை இரு தேவதைகள். இவற்றை நீ பக்தியுடன் பூஜை செய்து வந்தால் உனக்கு நன்மையே ஏற்படும்,'' எனக் கூறிவிட்டு உயிர் நீத்தாள்.

தன் பாட்டி இறந்தபின் அந்த ஊரில் இராமல் கேசவன் கால் போன திக்கில் போனான். அவன் ஒரு காட்டில் போனபோது அங்கு ஒரு வீட்டைக் கண்டு அதன் கதவைத் தட்டினான். ஒரு பெண்மணி கதவைத் திறந்து ''யார் நீ? என்ன வேண்டும்?'' என்று கேட்டாள்.

அவனும் ''நான் திக்கற்றவன். எனக்குப் புகலிடம் இங்கு கிடைக்குமா?'' என்று கேட்டான். அவளும் ''நீ சற்று தூரம் போனால் பழ மரங்கள் நிறைந்த இடம் உள்ளது. அங்கு ஒரு பாழடைந்த வீடும் உள்ளது. நீ அந்த வீட்டில் தங்கி பழங்களைச் சாப்பிட்டுக் கொண்டு சௌக்கியமாக இருக்கலாம். அங்கே போய் இரு!'' எனக் கூறி அனுப்பினாள்.

கேசவனும் அவள் கூறிய இடத்தை அடைந்து பாழடைந்த வீட்டினுள் சென்றான். தன் பாட்டி கொடுத்த இரு பொம்மைகளை அந்த வீட்டில் வைத்துப் பூஜை செய்து வரலானான்.

ஒருநாள் ஒரு பொம்மையிலிருந்து ஒரு தேவதை வந்து கேசவனிடம் ''நான் சுயநல தேவதை. உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டது. கேசவனும் ''திடீரென்று நீ என்முன் தோன்றியதால் என்ன வரம் கேட்பது



என்று தெரியவில்லை. நான் யோசித்து நாளை உன்னிடம் வரம் கேட்கிறேன்,'' என்று கேட்டுக் கொண்டான். சுயநல தேவதையும் அதற்குச் சம்மதித்தது.

சுயநல தேவதையா? சுயநலம் என்றால் என்ன என்று புரியாமல் அவன் விழித்தான். பிறகு அவன் காட்டில் சந்தித்த பெண்மணியின் வீட்டிற்குப் போய் அவளிடம் சுயநல தேவதை தோன்றியதைக் கூறி ''சுய நலம் என்றால் என்ன?'' என்று கேட்டான்.

அந்தப் பெண்மணியும் ''அது என்ன என்று பிறகு சொல்கிறேன். இவள் என் மகள். அழகானவாளக இருந்தும் பிறவி ஊமை. இவள் பேச வேண்டும் என்று அந்த தேவதை யிடம் வரம் கேள். உனக்கு என் மகளை விவாகம் செய்து வைக்கிறேன்,'' என்று கூறி ஒரு பெண்ணைக் காட்டினாள்.

கேசவனும் தன் வீட்டிற்குத் திரும்பி வந்து மறுநாள் சுயநல தேவதை தென்பட்டதும் அதனிடம் ''நான் ஒரு பெண்ணை மணக்க விரும்புகிறேன். ஆனால் அவள் பிறவி ஊமை. அவள் பேச வேண்டும் என்ற வரத்தைக் கேட்கிறேன்,'' என்றான். சுயநல தேவதையும் அந்த வரத்தைக் கொடுத்துவிட்டு மறைந்தது.

கேசவன் அந்த பெண்மணியைக் கண்டு ''உன் பெண்ணைப் பேச வைத்துவிட்டேன். அவளை எனக்கு இனி கல்யாணம் செய்து வை!'' என்றான். அவளோ, ''என் அழகான பெண்ணை எவனாவது அரசகுமாரன் வந்து கொத்திக் கொண்டு போய் விடுவான். போயும்போயும் அநாதையான உனக்கா கொடுப்பேன்? இது தான் சுயநலம் என்பது. தெரிந்ததா?'' என்று கூறி அனுப்பிவிட்டாள்.

அப்போதுதான் கேசவனுக்கு சுயநலம் என்றால் என்ன என்று புரிந்தது. அடுத்து அவன் தன்னிடம் இருந்த மற்ற பொம்மைக்குப் பூஜை செய்து வரலானான். பல நாட்கள் கழிந்தும் அந்த தேவதை அவன்முன் தோன்றவில்லை.

மாதங்கள், வருடங்கள் என்று கேசவன் பூஜை செய்து கொண்டே இருந்தான். தாடி, மீசை வளர்ந்து அவனுக்கு வயதும் அதிகமாகிக் கொண்டே போயிற்று.

முடிவில் ஒருநாள் அந்த தேவதை அவன்முன் தோன்றி ''நான் தன்னலம்

கருதாத தேவதை. நீ கேட்கும் வரத்தால் உனக்குப் பலன் கிடைக்க வேண்டுமெனில் நீ தன்னலம் கருதாத வரம் கேட்க வேண்டும். அப்படி ஏதாவது கேள்!'' என்றது.

கேசவனும், ''திடீரென நீ என்முன் தோன்றியதால் என்ன வரம் கேட்பது என்று இப்போது எனக்குத் தோன்றவில்லை. ஒருநாள் அவகாசம் கொடு. நாளை நான் விரும்பும் வரத்தைக் கேட்கிறேன்,'' என்று வேண்டவே, தேவதையும் அதற்குச் சம்மதித்தது.

கேசவன் உடனே தான் காட்டில் முதலில் சந்தித்த அதே பெண்மணியைக் கண்டு தன்னலமற்ற தேவதை தோன்றியதைக் கூறி ''நான் அதனிடம் தன்னலமற்ற வரத்தைக் கேட்க வேண்டும். தன்னலமற்றது என்றால் என்ன?'' என்று கேட்டான்.

இப்போது அந்தப் பெண்மணி கிழவியாகிவிட்டாள். அவள் கேசவனிடம் ''நீ முதலில் சாப்பிடு. பிறகு அது என்ன என்று சொல்கிறேன்,'' என்றாள். அவனும் சாப்பிட்டு எழுந்ததும் அவள் ''என் மகளைக் கலிங்க மன்னன் மணந்து கொண்டான். அவர்களுக்கு சோபனா என்னும் மகள் இருக்கிறாள். அவள் அழகானவளே. ஆனால் ஊமை. அவளுக்குப் பேச்சு வரும்படி செய். இது தன்னலமற்ற செயல். அவளை நான் உனக்கு மணம் செய்து வைக்கமாட்டேன். அதனால் நீ இந்த வரம் கேட்பது தன்னலமற்றதாக இருக்கும்,'' என்று கூறி அனுப்பினாள்.

கேசவனும் மறுநாள் தன்னலமற்ற தேவதையிடம் அதைக் கேட்பதா என்று எண்ணியவாறே நடந்து வழி



தவறி ஒரு முனிவரின் ஆசிரமத்தை அடைந்தான். அவரும் அவனைப் பற்றி விசாரித்துத் தெரிந்துகொண்டு ''நான் இங்கே இருபது ஆண்டு களாகத் தவம் செய்தும் அதற்குப் பலன் கிடைக்கவில்லை. அது ஏன் என்று உன் தேவதையிடம் கேட்டுச் சொல்!'' என்று கூறி அனுப்பினார். கேசவனும் தன் வீட்டிற்கு வந்தான்.

மறுநாள் தேவதை அவன்முன் தோன்றவே, அவனும் கிழவியின் பேத்திக்குப் பேச்சு வர வேண்டும் என்று ஒரு வரத்தைக் கேட்டதோடு, முனிவரின் தவத்திற்கு ஏன் பலன் கிடைக்கவில்லை என்றும் கேட் டான். தேவதை ஊமைப் பெண் ணுக்கு பேச்சு வர வழியைக் கூறி விட்டு ''அம்முனிவரின் கமண்டலம் அவர் செய்யும் தவசக்தியை விழுங்கி விடுகிறது. கமண்டலத்தை அந்த முனிவர் வேறு யாருக்காவது கொடுத் தால்தான் அவர் செய்த தவத்திற்குப் பலன் கிடைக்கும்,'' என்று கூறி மறைந்தது.

கேசவன் முனிவரைக் கண்டு தேவதை கூறியதை அவரிடம் தெரி விக்கவே, அந்த முனிவரும் கமண் டலத்தை அவனுக்கே கொடுத்தார். கமண்டலத்தைக் கேசவன் வாங்கிக் கொண்டதும் அவன் அழகிய இளை ஞனாகிவிட்டான். அதன்பின் அந்தப் பெண்மணியைக் காணச் சென்றான். இளைஞனாகிவிட்ட கேசவனை அவ ளால் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை.

பிறகு அவள் ''என் பேத்தி வந் திருக்கிறாள். அவளைக் கூப்பிடு கிறேன். அவள் பேச தேவதை என்ன சொல்லிற்று என்பதை அவளிடமே சொல்!'' என்று கூறித் தன் பேத்தியை அங்கு வரச் சொன்னாள்.

அவளும் அங்கு வந்து கேசவ னைக் கண்டதும் ''யார் பாட்டி இவர்?'' என்றுகேட்டாள். அவளும் ''உனக்குப் பேச்சு வரச் செய்தவர் இவரே. உன் கணவராகப் போகிற வரும் இவர் தான்,'' என்றாள் சிரித் துக் கொண்டே.

கிழவியின் பேத்திக்கும் கேச வனுக்கும் விவாகம் நடைபெற்றது. சில ஆண்டுகளுக்குப்பின் கேசவன் கலிங்கத்து மன்னன் ஆனான்.





# இரு மக்குகள்

ஆறுமுகம் என்ற விவசாயியின் கிரகங்கள் சரியாக இல்லை போலும். ஏனென்றால் அவனது வயலில் பயிர் அறுவடைக்கு வந்தபோது பெருத்த மழை பெய்து நஷ்டத்தை ஏற்படுத்தியது. மாமரங்கள் பூத்து காய்களாகும் நிலையில் அடர்பனி கொட்டி பூக்களெல்லாம் கருகிப் போயின. அவன் மகளுக்கு ஓரிடத்தில் சம்பந்தம் குதிரும் என்ற நிலையில் அது நடக்காமல் போயிற்று.

ஆறுமுகத்தின் மகன் சண்முகத்திற்கு தான் மிகவும் கெட்டிக்காரன் என்ற எண்ணமே இருந்தது. தன் தந்தைக்கு எதுவுமே கூடி வராதது கண்டு அவன் ஆறுமுகத்தின் ஜாதகத்தை சோதிடமாமணி சோமுவிடம் காட்டி என்ன குறை உள்ளது என்று கேட்டான்.

சோமுவும் விரல் விட்டு எண்ணிப் பார்த்துவிட்டு ''உன் வீட்டில் ஒரு துஷ்டக் கிரகம் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறது. ஒருவார காலத்திற்கு ஒரு விசேஷ பூஜை செய்து ஒரு மகா மக்குப் பேர்வழியை அழைத்துக் கொண்டு வந்து அவனுக்குத் திருப்தியாக சாப்பாடு போட்டால் அந்த துஷ்ட கிரகம் அவனோடு போய் விடும்,'' என்றான்.

சண்முகமும், ''ஒரு மக்குவையா கொண்டுவர வேண்டும்?'' என்று கேட்கவே, சோதிடனும் ''ஆமாம். உன் வீட்டில் நீங்கள் இரு புத்திசாலிகள் இருக்கிறீர்கள். அந்தக் கிரகத்திற்கு புத்திசாலிகளைப் பிடிக்காது. அதனால் ஒரு மக்கு மனிதனைப் பிடித்து வந்தால் அது அவனை விரும்பிப் பற்றிக் கொண்டு விடும்,'' என்றான். சண்முகமும் தன் தந்தையிடம் சோதிடர் கூறியதைத் தெரிவித்தான். அதைக் கேட்ட ஆறுமுகம் ''நமக்கு ஒரு மக்கு எங்கே கிடைப்பான்?'' என்று கேட்டான்.

அப்போது சண்முகத்திற்கு

- சுதாகஸ்வாமி -



வீராசாமியைப் பற்றி நினைவு வந்தது. வீராசாமி சுப்பையனின் மகன் அவன் ஆறுமுகத்தின் உற வினன். பக்கத்து ஊரில் வாழ்பவன். சுப்பையனுக்கும் எது செய்தாலும் சரிப்பட்டு வரவில்லை. அதற்குக் காரணம் வீராசாமி தன்னை மகா புத்திசாலி என்று எண்ணிக் கொண்டு செயல்பட்டு வருவதுதான். ஆனால் உண்மையில் அவன் மகா மக்கு. ஆனால் பிறர் அவனைக் கேலியாக மகா புத்திசாலி எனக் கூறவே, அவன் உச்சிகுளிர்ந்து போனான்.

சண்முகம் தன் தந்தையிடம் வீரா சாமியைப் பற்றிக் கூறி ''நீ கவலைப் படாதே! அவனை இந்திரன், சந்திரன் என்று புகழ்ந்து நான் அழைத்து வந்து விடுகிறேன்,'' என்று கூறினான்.

சண்முகம் அடுத்த ஊரிலுள்ள வீராசாமியின் வீட்டிற்குச் சென்றான். அங்கு அவனைக் கண்டு ஊர்க்கதை எல்லாம் பேசிவிட்டுக் கடைசியில் ''வீரா! உன் குரல் மிக இனிமையாக இருக்கிறதே. யாரிடமாவது இசைப் பயிற்சி பெற்றாயா?'' என்று கேட் டான். வீராசாமியும் ''இசையில் மட் டுமா, கவிதை புனைவதிலும் திறன் பெற்றவன்,'' என்று பெருமையுடன் கூறினான்.

சண்முகமும் ''அடேயப்பா! நீ பல துறைகளில் நல்ல தேர்ச்சி பெற்றிருக் கிறாயே. மகா புத்திசாலிதான். கடவுள் மட்டும் உன்னை அழகாகப் படைத்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?'' என்றான்.

அப்போது வீராசாமி, ''என்னை எல்லோருமே மிகவும் அழகானவன் என்று கூறுகிறார்களே!'' எனவே, சண்முகமும் ''எனக்குப் பொய் சொல் லத் தெரியாது. உள்ளதைத்தான் சொல்கிறேன். உன் இசை, உன் கவி தைகள், உன் கூரிய அறிவு என்று இவற்றை எல்லாம் பாராட்டவில் லையா? அழகு குறைந்துள்ளது. அதைத்தான் சொன்னேன். நீ மிகவும் புத்திசாலியாதலால் இதை மட்டும் மற்றவர்கள் எடுத்துக் கூறாமல் உன்னைப் புகழ்ந்தே வருகிறார்கள்,'' என்றான். இதைக் கேட்டு வீராசாமி மகிழ்ந்தான்.

இதன் பிறகு சண்முகம் ஒரு குறிப்பிட்ட நாளன்று தன் வீட்டில் விருந்துண்ண வர வேண்டும் என்று வேண்டினான். வீராசாமியும் அதற்கு இணங்கினான்.

சண்முகம் தன் ஊருக்கு வரவே, சோதிடன் சோமு பூஜைக்கான

ஏற்பாடுகளைச் செய்தான். குறிப்பிட்ட நாளன்று வீராசாமி சண்முகத்தின் வீட்டிற்கு வந்தான். அவனுக்கு நல்ல விருந்து சாப்பாடு போடப்பட்டது. அவனும் அதை வயிறு முட்டச் சாப்பிட்டான்.

வீராசாமி வந்து போனபின் ஆறுமுகத்தின் நிலை மாறியது. யாரோ தூரத்து உறவினர் அவன் பேரில் தன் சொத்தை எல்லாம் எழுதி வைத்து விட்டு இறந்து போனார். வயலில் நல்ல விளைச்சல் கண்டு பணம் வந்தது. மாந்தோப்பிலும் காய்கள் காய்த்து நன்கு விலை போயின. இச்சமயத்தில் அடுத்த ஊர் சுப்பையா ஆறுமுகத்தின் வீட்டிற்கு வந்தான். அவன் சண்முகத்திடம் பேசி அவனை மகாபுத்திசாலி எனப் புகழ்ந்து ஒரு குறிப்பிட்ட நாளில் தன் வீட்டிற்கு வந்து விருந்து உண்ணுமாறுவேண்டினான்.

அப்போது ஆறுமுகம் எச்சரிக்கை அடைந்தவனாய் ''நீ உன் வீட்டில் சிறப்பான பூஜை செய்கிறாயா?'' என்று கேட்டான். சுப்பையனும் ''ஆமாம். சோதிடமாமணி சோமுதான் அதைச் செய்கிறார். உனக்கு இது எப்படித் தெரியும்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

ஆறுமுகமும் ''அதே சோமுதான் என் வீட்டிலும் சிறப்புப் பூஜை நடத்தி ஒரு மக்குவுக்கு விருந்து சாப்பாடு போடச் சொன்னார். அதனால்தான் மக்குவான உன் மகனை அழைத்து வந்து விருந்து சாப்பாடு போட்டேன். துஷ்டக் கிரகம் உன் மகனைப் பற்றிக் கொண்டு போய் விட்டது. இப்போது நீ நான் செய்த பூஜையையே செய்து என் மகனை மக்கு என எண்ணி அவனை அழைத்துப் போய் துஷ்ட கிரகத்தை அவனிடம் சேர்க்க முயல்கிறாய். அவன் உன் வீட்டிற்கு விருந்துண்ண வர மாட்டான்,'' என்றான்.

அதைக் கேட்ட சண்முகத்திற்கு ஊரார் வீராசாமியை மக்கு என நினைப்பதுபோலத் தன்னையும் மக்கு என்றே நினைக்கிறார்கள் என்பது தெரிந்தது.

அன்றுமுதல் அவன் தான் மகா புத்திசாலி என நினைப்பதை விட்டு விட்டான்.



# உலகம் தோன்றிய விதம்

வெகுகாலத்திற்குமுன் பூமி என்பது இருக்கவில்லை. சூரியன், சந்திரன் என்றெல்லாம் இருக்கவில்லை. நட்சத்திரங்களும் இல்லை. இருந்தது எல்லாம் பரந்த கடலும், உயரத்தில் ஆகாயமும்தான். மகோயான் என்ற தேவன் கடலின் அதிபதி. ஆகாயத்தின் அரசன் காப்டன்.

ஆகாய அரசன் ஒருநாள் கடல் அதிபதியைக் கண்டு ''என் மகனுக்கு உன் மகளை மனைவியாக்க விரும்புகிறேன்,'' என்றுகோரவே, கடல் அதிபதியும் மகிழ்ச்சியுடன் அதற்குச் சம்மதித்தான். உடனே அத்திருமணம் நடந்தது. அத்தம்பதிகளுக்கு மூன்று மகன்களும் ஒரு மகளும் பிறந்தார்கள். மூத்த மகன் லீகாலிபூடான். கற்பாறை போன்ற உடலைக் கொண்டவன், தைரியசாலி. இரண்டாவது மகன் லியாட்லோ. தங்கம் போன்ற உடலுடையவன், எப்போதும் ஆனந்தமாகக் காலம் கழிப்பவன். மூன்றாவது மகன் லேபுடான். தாமிர நிறத்தில் உடலைக் கொண்டவன், பலம் அற்றவன், எதற்கும் பயப்படுபவன். மகள் லீனுகா வெள்ளி போன்ற உடலோடு அழகாக இருப்பவள்,

கொஞ்ச காலத்திற்குப் பின் லீஹான்ஜீன் இறக்கவே, அவனது மூத்த மகன் லீகாலிபூடான் வாயுவின் அதிபதியானான். லீடாகாட்டும் அதன்பின் மரணமுற்றாள்.

சில ஆண்டுகள் கழிந்தன. லீகாலிபூடான் தான் மிகுந்த பலசாலி என்று பெருமைப்பட்டுக் கொண்டான். அதனால் வாயுவைத் தவிர ஆகாயம் முழுவதையும் தன் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர எண்ணினான். அதனால் காப்டனைத் தாக்க எண்ணித் தன் தம்பிகளைத் தன்னோடு வருமாறு அழைத்தான். அவர்களுக்கு அந்தத் தாக்குதலை நடத்த விருப்பம் இல்லை.

அதை லீகாலிபூடான் ஏற்காமல் கோபத்துடன் கத்தவே, அவனோடு அவர்கள் சென்றார்கள். மூவரும் படையோடு ஆகாயத்தை அடைந்தார்கள். அதன் வாசல் கதவுகள் தூள் தூளாகின. சகோதரர்கள் சந்தோஷமாய் உள்ளே சென்றார்கள். அவர்கள் காப்டனின் கடுமையான எதிர்ப்பைச் சந்திக்க வேண்டியதாயிற்று. காப்டன் அவர்கள் மீது மூன்று இடிகளை ஏவினான்.

முதல் இடி தாமிர உடலைக் கொண்ட லிபூடானின் மீது



விழுந்தது. அவனது உடல் உருகி ஒரு கட்டியாக ஆகிவிட்டது. இரண்டாவது இடி தங்க உடல் கொண்ட லியாட்லோ மீது விழுந்து அவன் உடலை உருக்கிக் கட்டியாக்கியது. மூன்றாவது இடி மூத்தவனான லீகாலிபூடான் மீது விழுந்து அவனது உடலைச் சுக்குநூறாக்கவே, அத் துண்டுகள் கடலில் போய் விழுந்தன. அவை கடலில் திட்டுத்திட்டுகளாகி பூம்பிரதேசமாக ஆகியது.

இச்சமயத்தில் அந்த மூவரின் தங்கை லீனுகா ஆகாயத் தலை வாசலுக்கு வந்தாள். அவளைக் கண்டு காப்டன் கோபம் கொண்டு ஓர் இடியை அவளையும் தாக்கும்படி அனுப்பினான். அவளது உடல் சிறு சிறு துண்டுகளாகி ஆகாயம் முழுவதிலும் சிதறி விழுந்தது.

இதற்குப் பிறகு ஆகாய அதிபதி இறங்கி வந்து சமுத்திரத்தை தாக்கவே, சமுத்திரத்திலிருந்து வெளியே வந்த மகோயான், ''நான் நீண்ட காலம் அயர்ந்து தூங்கிவிட்டேன். இப்போதுதான் எழுந்தேன். என் பேரன்கள் உன் பேரன்களும்தானே. கோபப்படாதே! நிதானத்திற்கு வா!'' என்றான். காப்டனின் கோபமும் தணிந்தது. ஆத்திரப்பட்டு தன் பேரன்களைக் கொன்றுவிட்டதற்காக அவன் மிகவும் மனம் வருந்தினான்.

தம் பேரன்களை அவர்களால் உயிர்ப்பிக்க முடியாது போனாலும் உருகிக் கட்டிகளாக மாறியவற்றிற்கு அவர்கள் பளபளக்கும் ஒளியை அளித்தார்கள்.



தங்கக் கட்டியான லீயாட்லோ சூரியன் ஆனான். தாமிரக் கட்டியான லீபுடான் சந்திரன் ஆனான். சுக்குநூறாகி ஆகாயத்தில் சிதறிக் கிடந்த லீனுகா பல நட்சத்திரங்களாக மின்னினாள்.

படையெடுப்பிற்குக் காரணமாக இருந்த லீகாலிபூடானுக்கு அவர்கள் ஒளி கொடுக்க மறுத்தனர். ஆனால் அவனது உடலை பூப்பிரதேசமாக்கி வருங்கால மானிடர்களுக்கும் உயிரினங்களுக்கும் பயன்படத்தக்கதாய் இருக்கட்டும் என்று கூறினார்கள்.

இதன் பயனாக அதில் பல முனைகள் தோன்றின. ஒரு முனையில் தான் சிகாலன் என்ற ஆண்மகன் வெளி வந்தான். இரண்டாவதாக மற்றொரு முனையில் சிகாசே என்ற பெண் தோன்றினாள்.

இவர்கள் தாம் மனிதர்களின் ஆதி தாய், தந்தையர்கள். இந்த பூப்பிரதேசத்தைச் சுற்றி சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் என்பன நிலை கொண்டன.

சேனாதிபதி வீரசிம்மன் தீட்டிய சதித் திட்டம் மன்னன் சாந்தி தேவனுக்குத் தெரிந்துவிட்டது. குழந்தையை எடுத்துக் கொண்டு சுரங்கம் வழியாகத் தப்பி ஓடி விடும்படி மன்னன் ராணியிடம் கூறினான். அரண்மனை வெளியிலிருந்து தாக்கப்பட்டது.

# சூர்யா

வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்





ஓவியம் : காந்தி அய்யா




மன்னன் தன் அறைக்குத் திரும்பி வந்தான்.



கதவு 'தடதட'வென்று தட்டப்படும் சத்தம் கேட்டது.




கதவில் இருந் ஓட்டை வழியா வெளியே பார்த்தா






பருமனான மரத்தூணைக் கொண்டு கதவை உடைக்கலானார்கள்.


மன்னன் திடீரென்று கதவைத் திறந்தான்.
தாக்கியவர்கள் ஒருவர் மீது ஒருவராக திடீரெனப் போய் விழுந்தார்கள்.
மன்னன் வாளை உருவிக் கொண்டு முன்வந்து...
...சிலரை வீழ்த்தினான்.

அரண்மனைக்கு வெளியே இளவரச
பிறந்ததினக் கொண்டாட்டம் வா
வேடிக்கைகளுடன் நடந்துகொண்
இருக்க, அரண்மனைக்குள் நடப்ப
யாரும் அறியவில்லை.

வீர சிம்மன்!





மன்னன் தப்பித்து ஓடி...



...மாடி வழியில் இருந்த வர்களை எதிர்த்தான்.


ன்னனைப் பிடிப்ப
ற்காக அவர்கள்
சய்த முயற்சி
லிக்கவில்லை.


அப்போது மன்னனைத் தாக்கிய வீர சிம்மனின் ஒரு காதை மன்னனின் வாள் வெட்டித் தூர விழச் செய்தது.


மன்னன் அரண்மனை யின் மேல்தளத்தை அடைந்தான்.


ரு வீரன் அவனைக்
கைப்பிடி சுவரருகே போக
விடாமல் தடுத்தான்.






மன்னன் அவனை ஒரே அடியில் கீழே விழ வைத்தான்.


ரண்மனை மேல்
ளத்திற்கு ஏறி வர சில
ரர்கள் முயல்வதை
ன்னன் பார்த்தான்.
தொடரும்

# கேளிக்கை நேரம்




## சரியானதைப் பிடிக்கிறது!

இந்தக் கோழிக்குப் புழுக்களைத் தின்ன வேளை வந்துவிட்டது. ஒரே மாதிரியாக உள்ள இரு புழுக்களைத் தேர்ந்தெடுக்கிறது. அவை எவை?



II

## வண்ண வேடிக்கை!

காட்டு ராஜா சிங்கம் வண்ணத்தை இழந்துள்ளது. உங்கள் வண்ணப் பெட்டியை எடுத்து ஏற்றபடி வண்ணம் கொடுங்கள்!

## III படத்தில் குழப்பம்






மீனாவும் ரமேஷும் போட்டோ எடுத்துக் கொள்ளத் தயாராகிவிட்டார்கள். அவர்களின் குறைகளைக் கண்டுபிடித்துப் படத்தைச் சரி செய்யுங்கள்!

## IV வழி காட்டுவீர்களா?



கபாலி கரையில் இருக்க அவனது மகன் கடலில் படகில் சற்றுத் தொலைவில் இருக்கிறான். கபாலி தன் மகனை அடையும் பாதையைக் காட்டுங்கள்!

*(விடைகள் 66ம் பக்கத்தில்)*



வாக்கியம் உருவாக்குங்கள்

# போட்டோ வாக்கியப் போட்டி



MAHANTESH C. MORABAD



SOURA



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு நவம்பர் 2003 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

ஜூலை 2003 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

**கே.என். கீதா**

எஸ்.பி.ஓ.ஐ.ஏ.மெட்ரிக் மாடல் மேல்நிலைப் பள்ளி, ஏரித் திட்ட ஏரியா, முகப்பேர், சென்னை – 600 037.

பரிசு பெற்றவை





குருவாயூர் செல்லவோ?
குறி வாயால் சொல்லவோ?

**கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 64-65)**

1. ***சரியானதைப் பிடிக்கிறது :*** புழுக்கள் C, E ஒன்று போன்றவை.

3. ***படத்தில் குழப்பம் :*** பொருத்த 5, 6, 7, 3, 4, 2, 1 என்பனவற்றை வைக்க வேண்டும்.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

